“ கற்றோர் கடாமுகப்பர் கல்விதனி லாசையுள்ளோர்
பெற்றோ மெனவுகந்து பின்புகற்பர்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னெஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு.”

# விவேகசிந்தாமணி.

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

புத்தகம். II. 1894ஸு மார்ச்சுமீ இலக்கம் 11.

## PROCEEDINGS OF THE MADRAS GOVERNMENT.

THE following order of the Madras Government has been communicated to us through the proper channel :—

*Local and Municipal Department.*

Read the following paper :—

From the President, District Board, Coimbatore, dated 31st January 1894, Reference on No. $\frac{179}{\text{D. B.}}$ requesting sanction for the purchase of a copy of “*Viveka Chintamani*” for each of the Salary Results Schools under the control of the Pollachi Taluq Board.

ORDER—dated 1st February 1894, No. 274, L. Mis.

Sanctioned.

(True Extract.)

(Signed) LIONEL DAVIDSON,
*Ag. Assistant Secretary.*

## சென்னை கவர்ன்மெண்டார் ‘ப்ரொஸீடிங்ஸ்.’

சென்னை கவர்ன்மெண்டார் செய்த பின் வரும் உத்திரவு தக்க அதிகாரிகள் மூலமாக நமக்குத்தெரியப்படுத்தப்பட்டிருக்கிறது :—

**லோகல் அன்ட் முனிசிபல் டிபார்ட்மேண்டு.**

கொயமுத்தூர் டிஸ்திரிக்ட் போர்ட் பிரெஸிடெண்டிடமிருந்து 1894ஸு ஜனவரிமீ 31உ யிட்டு $\frac{179}{\text{D. B.}}$ நெ போட்டு, பொள்ளாச்சி தாலூகா போர்டாரின் மேன்பார்வையிலுள்ள ஸாலரி ரிஸல்ட் பாடசாலைகள் ஒவ்வொன்றுக்கும் விவேக சிந்தாமணி பத்திரிகையில் ஒரு காபி வாங்கிக்கொடுக்க ‘ ஸாங்ஷன்’ சேட்டுவந்த கடிதம் படிக்கப்பட்டது.

உத்திரவு.

1894ஸு பிப்ரவரிமீ 1உ, நெ. 274, L. Mis.

கேட்ட ஸாங்ஷன் கொடுக்கப்பட்டது.

(சரியான எக்ஸ்திராக்ட்).

(ஒப்பம்). ல்யனல் டேவிட்ஸன்,
ஆக்டிங் அஸிஸ்டெண்ட் செக்ரிடெரி.

## ஜோதிஸ்.

### IV.

*முன்பத்திரிகையில் துருவஜோதிஸைப்பற்றிக் கொஞ்சம் பிரஸ்தாபித்தோம். நம்முடைய சாஸ்திரங்களில் இராத்திரி காலங்களில் சிவப்புவெண்மை, வெள்ளைச்சிவப்பு, நீலம், மஞ்சள் இவ்வகை நிறமுள்ள வானவிற்கள் காணக்கூடுமென்றும், அவைகளின் பலன் இன்னதென்றும் சொல்லியிருக்கிறது. இராத்திரி சாலங்களில் கறுப்பு வானவில் காணுமென்றும் எழுதப்பட்டிருக்கிறது. நானு திக்குகளிலும் இராத்திரி காலங்களில் வானவிற் காணலாமென்று கூறியிருக்கின்றது. வராகசம்ஹிதையில் ௩௰௫ - ம் அத்தியாயத்தில் ௪௰௭, ௪௰௮-ம் சுலோகங்களைப் பிர

* சென்ற நவம்பர் மாசத்துச் சஞ்சிகையைப் பார்க்க. (Vol. II. No. 7.)

மாணமாக எடுத்துக்காட்டலாம். "ஆகாசமில்லாத இடங்களில் வானவிற்கண்டால் பூமியில் மரணங்கள் உண்டாகும். அது வெள்ளைச்சிவப்பாயிருந்தால் மானிடர் ஆயுதங்களால் வருந்துவார்கள். மஞ்சளாயிருந்தால் அக்கினியாலும், நீலமாயிருந்தால் பட்டினியாலும் ஜனங்கள் வருந்துவார்கள். இராத்திரி காலங்களில் வானவில் கிழக்கே கண்டால் இராஜாக்கள் கஷ்டப்படுவார்கள். தெற்கே கண்டால் தளகர்த்தன் சாவான். மேற்கே கண்டால் உபாத்தியாயர்கள் கஷ்டப்படுவார்கள். வடக்கே கண்டால் மந்திரிகள் துக்கிப்பார்கள்," என்று மேற்சொன்ன சுலோகங்களிற் காண்கிறது. மேற்படி ௩௰௫-வது அத்தியாயத்தில் பலவகை நிறமுள்ள சூரியரச்மிகள் மேகங்களில் விழுந்து காற்றினால் வளைபடும்போது வானவில் உண்டாகின்றனவென்று சொல்லப்பட்டிருக்கிறது. இராத்திரி காலங்களில் சூரியரச்மிகள் காணக்கூடாதாகையாலும், சூரியரச்மிகளின் பலஹீனமான ரூபமாகிய சந்திரிகையால் கிழக்கு அல்லது மேற்கு, இவ்விரண்டு திக்குகள் ஒழிய மற்ற திக்குகளில் வானவிற்காணக்கூடாதாகையாலும், அங்காரகன் முதலிய மற்ற கிரகங்களுடையவும் நக்ஷத்திரங்களுடையவும் ஜோதியால் உண்டாகக்கூடாதாகையாலும், இராத்திரி காலங்களில் காணப்பட்ட வானவில்லானது மின்னல் சக்தி, காந்தசக்தி இவைகளின் பலனாகிய துருவ ஜோதிஸின் ஒரு திருஷ்டாந்தமாகவே இருக்கவேண்டும். ஆனால் இக்காரணத்தால் கறுப்பு வானவில் எவ்வாறு உண்டாகுமென்று தெளியக்காணோம். இவ்வகைக் காக்ஷியானது அபூர்வமானதாலும், அது இதுவரை என் கண்ணுக்குத் தட்டுப்படாமல் இருப்பதாலும் அதின் காரணம் இன்னதென்று என்மனதில் படவில்லை. கறுப்பு என்பது நிறம் இன்மையாதலால் கறுத்த வானவிற் காணப்பட்ட இடத்தில் நிறத்திற்கு ஏதுவாய ரச்மிகளோ, மின்னல், காந்தல் சக்திகளோ இல்லாமல் இருக்கவேண்டும்.

(Zodiacal Light.) ௯-வது காணக்கூடிய ஜோதிஸ் ராசிஜோதிஸாம். இந்த ஜோதிஸானது எல்லா மாதங்களிலும் காணக்கூடியதன்று. தை, மாசி மாதங்களில் மேற்கே அஸ்தமித்த பிற்பாடு ௮, ௯ நாழிகை வரையிலும், அற்பசி, கார்த்திகை மாதங்களில் சூரிய உதயத்திற்கு ௫, ௬ நாழிகைக்கு முன்பு முதற்கொண்டும் காணலாம். இதற்குக் காரணம் சூரியனைச் சுற்றிலும் இருக்கிற ஜோதிராகாசந்தான். சூரியனைச் சுற்றிலும் ஜோதிராகாசம் உள்ளதாய் சூரியனைப்பற்றிய பத்திரிகையில் சொல்லியிருக்கின்றோம். இந்த ஆகாசமானது கோழி முட்டை வடிவமாய் சூரிய மண்டலத்திற்கு இருபுறத்திலும் நீண்டிருக்கிறது.

பூமியானது சூரியனைச் சுற்றி வரும்போது சூரியனுக்கு வால்போலிருக்கும் இந்த ஜோதிராகாசத்திற்கு சமீபித்து வருங்காலத்து சூரிய உதயத்திற்கு முந்தியாவது சூரியாஸ்தமனத்திற்குப் பிற்பாடாவது இவ்வகை ஜோதிஸ் நமக்குக்காணப்படுகிறது. இந்த ஜோதிஸ்ஸின் வடிவம் அடிவானத்தில் விரிந்தும் உயரச்செல்லச் செல்ல விரிவு குறைந்து ஒடுங்கி கூர்மைப்பட்டும்போகிறது. இதனால்தான் அண்டாகாரமாய் ஜோதிஸ் இருக்கவேண்டுமென்று நாம் முன்னமே சொன்னோம். ஆனால் ராசி ஜோதிஸை 'திக்தாஹா' (செவ்வானம்) என்று சொல்லப்பட்ட சந்தியாகாலத்து சோபையோடு குழப்பக்கூடாது. ஏனென்றால் ராசி ஜோதிஸ் காணக்கூடாத மாதங்களில் கூட சந்தியாசோபையைக் காணலாம். 'பிரதிசூரியனும்' அவ்வாறே. 'திக்தாஹா,' 'பிரதிசூரியன்' என்ற தோற்றங்கள் சாக்ஷாத் சூரிய ரச்மிகளின் தோற்றந்தான். பொய் சூரியனைப்பற்றி நாம் *முதலாவது பத்திரிகையில் எடுத்துக்காண்பித்த வியாக்கியானங்கள் 'திக்தாஹா' என்ற தோற்றத்திற்கும் அமையும். ஆனால் 'பிரதி சூரியன்' என்ற தோற்றத்தில் சூரியரச்மிகள் கோளாகிருதியாய் ஆகாசத்திலுள்ள வாயுவாம்சங்களால் திரட்டிக்காண்பிக்கப்படுகின்றன.

'திக்தாஹா' என்ற தோற்றத்தில் மேற்படி ரச்மிகள் பரந்து காண்கின்றன.

சூரியன் என்ற பதார்த்தத்தில் சூரியன்மண்டலத்தைச் சுற்றிய ஜோதிராகாசமும் உள்பட வேண்டியது முறைதான். விருத்தாகாரமாயுள்ள சூரியமண்டலத்திலிருந்து நேர்பட்டு வரப்பட்ட சூரியரச்மிகள் ஆகாசத்தில் விருத்தாகாரமாகவோ, பரவலாகவோ காணும்போது அதற்கு முறையே 'பிரதிசூரிய'னென்றே, 'திக்தாஹா' (செவ்வானம்) என்றே பேர் உண்டாகிறது. அந்த மண்டலம் அல்லாத ஜோதிராகாசம் புலப்படும்போது அதற்கு ராகு ஜோதிஸ் என்றுபேர். வாஸ்தவத்தில் இந்த ஜோதிராகாசம் சூரியனிடத்தில் ஜனித்ததுதான்.

ஆகாசத்தில் காணக்கூடிய ௰-வது ஜோதிஸ் காற்றின் பின்னும்சங்களாகிய அக்னிவாயுவின் ஜோதிஸாம். இந்த ஜோதிஸானது பல்வகை நிறமாகக் காணாது ஒருவகை நிறமாகவே காணக்கூடும். ௪-வருஷங்களிற்குமுன் அர்த்த இராத்திரியில் இவ்வகை ஜோதிஸ் நான் கண்டேன். அதைப்பார்த்தபோது புகையில்லாமல் வீடுவீடுகளாய் ஏககாலத்தில் அக்னி பற்றி எரியும் பிரகாசம்போல் தோன்றிற்று. வெயில்

* சென்ற ஆகஸ்டு மாசத்துச் சஞ்சிகையைப் பார்க்க. (Vol. II. No. 4.)

காலத்திற்றன் இவ்வகைத் தோற்றங்கள் அதிகமாய்க் காணக்கூடும். யாதொரு களங்கமில்லாத இராத்திரி காலத்தில் திடீரென்று மின்னல் கண்டதுபோல்கண்டு மறைகிறதுமுண்டு, தீர்க்ககாலம் நிற்பதுமுண்டு. இந்த ஜோதிஸைப்பற்றி வராகசம்ஹிதையில் சொல்லப்பட்டிருக்கிறது. 'பாஸ்பரசென்ஸ' (Phosphorescence) என்ற வாயுவின் விசேஷத்தாலும் ஜோதிஸ் தோன்றலாம். இராத்திரி காலங்களில் சமுத்திரத்தின் அலைகளில் காணப்படும் அதி மனோகரமான ஜோதிஸும் உப்புஜலங்களில் தோணிகள் செல்லும்போது காணப்படும் ஜோதிஸும் பெரும்பாலும் இக்காரணத்தால்தான் உண்டாகின்றன. கொள்ளிவாய் பிசாசு என்று சில சமயங்களில் ஜனங்கள் பயப்படுகிற ஜோதியும் இவ்வகை அக்னி வாயுவுகளின் பிரகாச விசேஷமென வெள்ளைக்கார சாஸ்திரிகள் சொல்லுகிறார்கள். இதனால் நான் பிசாசு இல்லை என்று சொல்லவரவில்லை; பிசாசுகள் ஜோதிஸ் வடிவமாய்த்தோன்றக் கூடும். இதைப்பற்றி பிற்பாடு விஸ்தாரமாய் பிரஸ்தாபிக்கிறேன்.

ஆகாசத்தில் ௧௪-வது காணக்கூடிய ஜோதிஸ் பொரிகள்போன்ற ஜோதிஸாம். மின்னற் காந்த சக்தியால் காணப்படும் பொரித் தோற்றங்களை ஒழித்து இவ்வாறு காணப்படுவது கண்குற்றமே அல்லாமல் வாஸ்தவமன்று. அதிக உழைப்பினாலோ வேறு காரணங்களினாலோ கண்ணிலுள்ள நரம்புகள் ஜலத்திரள்கள் இவைகளுக்குக் கேடு உண்டாகி ஆகாசத்தில் வியாபகமாயிருக்கிற சூரியரச்மிகளைப் பொரிபோலவும், விசிரிபோலவும், படல்போலவும் காண்பிக்கக்கூடும். வியாதி உள்ளவன் கண்ணுக்குச் சந்திரன் இரட்டையாகவோ அதற்கு அதிகமாகவோ கண்டால் அவன் சீக்கிரம் சாவானென்று வராகமிஹிரர் சொல்லுகிறார்.

ஆகாசத்தில் ௧௫-வது காணக்கூடிய ஜோதிஸ் வெறுங்கண்ணுக்குத் தோற்றக்கூடியதன்று. தூரதொலைக் கண்ணாடியினால் காணக்கூடியதாம். இந்த ஜோதிஸ்ஸானது நக்ஷத்திர மண்டலங்கட்கப்பாலும் புனர்பூச முதலிய நக்ஷத்திரப்பிரதேசங்களிலும் காணக்கூடும். இதற்கு இங்கிலீஷில் 'நெபுலா' (Nebula) என்று பெயர். தூரதொலைக்கண்ணாடியில் இந்த ஜோதிஸ்ஸானது கை விரல்களில் சங்கரேகைகள் எவ்வாறு வளைந்து சுற்றுக்குள் சுற்றாய்க் காண்கிறதோ அவ்வாறு வளைந்தும் மற்றும் பலவடிவங்களாயும் காண்கிறது. அந்த ஜோதிஸ் வகிக்கும் பதார்த்தங்கட்கு அடர்த்தியில்லை. காலகதியால் இந்த அடர்த்தியில்லாமல் காற்றிலும் இலேசுபட்டிருக்கிற பதார்த்தங்கள் உறைந்து நக்ஷத்திரங்கள், கிரகங்கள், உபகிரகங்கள் முதலிய வானஜடங்கள் உண்டாயிருப்பதாய் வெள்ளைக்கார சாஸ்திரிகளின் சித்தாந்தம். நமது வேதத்திற் சொல்லியபடி ஆகாசத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்னியும், அக்னியிலிருந்து அப்புவும், அப்புவிலிருந்து பிரிதுவியும் உண்டாயதாய் நாம் வகித்துவரும் அபிப்பிராயத்திற்கு மேற்கண்ட வெள்ளைக்காரசாஸ்திர சித்தாந்தம் அனுகூலம்.

நானாவித மதபுஸ்தகங்களில் ஈசுவராம்சமான சில ஜோதிர் விசேஷங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஒரு பக்தனுக்காக தேவியானவள் தன் காதிலுள்ள ஒரு தாடங்கத்தையெடுத்து ஆகாசத்திலெறிந்து அதின் தேஜஸ்ஸால் அமாவாஸ்யையை பௌர்ணமியாகச்செய்தாளென்று நம்முடைய உப்புராணங்கள் ஒன்றில் காண்கிறது. வைதீக மார்க்கத்தை ஸ்திரப்படுத்தவும் அனுசரிக்கவும் திரு அவதாரம் செய்த நமது திருஞ்ஞானசம்பந்தமூர்த்தி ஸ்வாமிகள், அநேக அற்புதங்கள் செய்து க்ஷமண மதத்தைப்போக்கி விவாகஞ் செய்துகொண்ட காலத்தில், விவாக முடிந்தவுடன் தாமும் தம்முடைய பத்னியும் கிரகஸ்தாச்ரமத்தில் தீர்க்ககாலமிருந்தால் ஒருவேளை கர்ம்ம பாசமானது தம்மைப் பற்றிக்கொள்ளுமென்று பயந்து பரமசிவனை ஸ்துதித்துத் தியானித்தபோது ஒருபெரிய தேஜஸ் உண்டாயிற்றென்றும் அந்த ஜோதிஸ்ஸில் கலியாணத்திற்கு வந்த ஜனங்களில் யார்யார்க்கு இஷ்டமுண்டோ அவர்கள் திருஞ்ஞானசம்பந்தமூர்த்தியின் அனுமதிப்படி அதில் பிரவேசிக்க, சாயுஜ்யபதவி பெற்றார்களென்றும், முடிவில் திருஞ்ஞானசம்பந்தமூர்த்தியும் தம் குடும்ப சகிதம் அந்த தேஜஸ்ஸில் பிரவேசித்து சாயுஜ்யபதவி பெற்றாரென்றும் பெரியபுராணத்திற் காணப்படுகின்றது. அதுபோலவே கிறிஸ்தவ புஸ்தகத்தில் இஸ்ரவேலர் எஹிப்து தேசம்விட்டு யாத்திரை சென்றகாலத்தில் இராக்காலங்களில் அவர்கட்கு வெளிச்சங் காட்டும்பொருட்டு ஆகாசத்தில் ஜோதிஸ்தம்பம் கண்டதாக எழுதப்பட்டிருக்கிறது. ஏசுகிறிஸ்து ஜனித்த சமயத்தில் ஒரு நக்ஷத்திரம் உதித்ததாகவும் எழுதப்பட்டிருக்கிறது. இவ்வாறுதித்த நக்ஷத்திரமானது வாஸ்தவமாயிராதென்றும், இருந்தாலும் வால்லில்லாதூமகேது வாயிருக்கலாமென்றும் டின்டெல் (Tyndal) என்ற இங்கிலீஷ் சாஸ்திரியெழுதியிருக்கிறார். இராத்திரி காலங்களில் ஸ்தம்பம்போல் ஜோதிஸ் காணலாமென்று நம்முடைய சாஸ்திர புஸ்தகங்களிற் காண்கிறது. ஆகையால் கிறிஸ்தவ புஸ்தகங்களில் சொல்லப்பட்ட திருஷ்டாந்தங்கள் ஈசுவர சங்கற்பத்தால் பிரத்தியேகமாய் விசேஷித்து உண்டானதாய் விசாரிக்க இடமில்லை. என்றும் குறைவில்லாமல் ஒரே ரீதியாய் அதி தேஜஸ்ஸோடு சூரிய பகவானுக்குள்ள ஜோதிஸ்ஸானது சூரியவாசிகளா

கிய மகாத்மாக்களுடைய ஆத்மதேஜஸ்ஸென்றும், அது வேறே எவ்வித காரணத்தாலும் உண்டானதல்லவென்றும், வேறே காரணத்தால் உண்டாயிருந்தால் அதற்கு க்ஷயலயம் இருக்கவேண்டுமென்றும், அவ்வாறு காணப்படாதபடியால் சூரியவாசிகளின் தேஜஸ்ஸாயிருக்கவேண்டுமென்று பல காரணங்கள் கண்டு தான் சொல்லியிருக்கும் சித்தாந்தம் திவ்ய திருஷ்டியுள்ள புராண புருஷர்களாகிய ஆரிய மஹாத்மாக்களுடைய சித்தாந்தத்திற்கு ஒற்றுமையா யிருக்கிறதென்றும், **லூயி பூஜியர்** என்ற பரங்கி சாஸ்திரி யெழுதியிருக்கிறார். சாக்ஷாத் ஈசுவரன் ஜோதிஸ் ரூபியென்று சகல சாஸ்திரங்களிலும் மதங்களிலும் காணப்படுகின்றது. அப்பேர்ப்பட்ட ஈசுவரனானவர் ஜோதிஸ்ரூபமாய் பக்தஜனங்கட்கு கடாக்ஷிப்பது அசாத்தியமன்று.

நக்ஷத்திர மண்டலங்களில் கண்ணாடி மூலம் காணப்பட்ட ஜோதிர் மயமான நெபுலக்கூட்டங்களும்,* ஆகாச கெங்கையில் நக்ஷத்திர அடர்த்தியால் மேகம் போல் செரிந்து காண்பதுபோலப், பிரத்தியேகம் பிரத்யேகமான நானாவித நக்ஷத்திரக் கூட்டங்களென்று பரிஷ்காரப்படுத்தப்பட்ட தூரதிருஷ்டிக் கண்ணாடிகளால் காணப்பட்டிருக்கின்றன. ஆகாச முழுமையும் நீலமாய்க் காண்பது ஆகாசத்தில் இயற்கையாயுள்ள பிரகாசத்தால் அல்ல. ஆகாயக்கூண்டுகளில்† (அதாவது புகைக்கூண்டுகளில்) வானத்தில் 3-மயில் 4-மயில் உயரச்சென்று பார்த்தால் ஆகாசமெல்லாம் நீலமாய்க் காணாமல் இருண்டு காணும். உன்னதமான மலைகளிற் சென்று பார்த்தவர்கள் இதற்கொற்றுமையாக எழுதியிருக்கிறார்கள்.

**எஸ். இராமஸ்வாமி அய்யர், பி. ஏ., பி. எல்.**

## ‡ செல்வம்.

செல்வமாவது யாது, அதை எப்படி அடையலாம், எப்படிக் காப்பாற்றுகிறது, என அநேகம் பேர் அடிக்கடிக் கேட்பதும், பேசுவதும் உண்டு. அதற்குச் சரியான மறுமொழி சொல்வது யார்க்கும் அரிது. ஒருவாறு விளக்கப் பார்க்கலாம்.

உயிர்வாழ்க்கைக்குத் தேவையாம் பொருள் இல்லாமலாவது குறைச்சலாயாவது இருப்பது வறுமையாம்; வடமொழியில் தரித்திரம் என்பர். சோம்பலின்றி உழைப்புக்குத் துணிந்துச் சிக்கனமாயிருப்பவர் வறுமையை நீக்கலாம். பிழைப்புக்கு வேண்டிய பொருள்வருவாய் மாத்திரம் உள்ளவர் செல்வரெனப் படமாட்டார்கள்.

### சுகப்பிழைப்புக்கு மிஞ்சிய வருமானம் செல்வமாம்.

ஏதாவது சாமான் வேண்டுமட்டும் கிடைக்கும்படியாயிருப்பது செல்வமல்ல. அந்தச் சாமான் தமக்கும் பிறர்க்கும் பயன்படத் தகுந்ததாயிருக்கவேண்டும். பயன்பட்டு மாறி விலையாவது தனக்கு வேண்டியதற்கும் அதிகமாயிருப்பது செல்வம். தொட்டதெல்லாம் பொன்னாகும் வரம்பெற்ற ஒருவர் கதையுண்டு. தொட்டுப் பொன்னானது காரியத்துக்கு உதவாமல் அவர் வறியராகவே யிருந்தாராம். மலையில் வசிப்பவர்க்குக் கல்லும் விறகும் வேண்டியமட்டும் மலையிலகப்படும், தம்தம் வீட்டுவேலைக்கு உதவுவதுபோக மீதிக்கல்லும் விறகும் விலையாகுமிடத்தில் வந்தால்தான் பொருள்படும். ரொக்கப்பொருள் ரொக்கமாகவே இருந்தால் அது செல்வமாகமாட்டாது. தம்காரியத்துக்கு உதவியதுபோக மிகுதியாம் பொருளால் உடையவர்க்கு யாதொரு நன்மையும் இல்லை. இம்மிகுதிப் பொருள் வேலைமேல் போடப்பட்டு வரும்படிக் காதாரமானால் அவ்வேலையைச் சரியாயும் சாக்கிரதையாயும் நடத்துவதில் புத்திக்குப் பயிற்சி யுண்டாய்ச் சுகமும் உண்டாம்; அவரும் செல்வராவர்.

**ஆகவே, தம்தம் நியாயச் செலவுக்கு மிஞ்சி, நினைக்கும்போது ரொக்கமாகும்படியான உடைமைகளின் மதிப்பே செல்வமாம்.**

### குடிச்செல்வம்.

மாதம் ஒன்றுக்கு 10 ரூபாய் பிடிக்கும் வாழ்க்கையுடையவர்க்கு ரூபாய் 12 வருமானால் இரண்டு ரூபாய் மிகுக்கும்படியாயிருப்பது செல்வம். இன்னொருவர் வருமானத்தில் மாதம் 1-க்கு 20 ரூபாய் மிகுக்கும்படியாயிருப்பது அவர் செல்வம். மூன்றாவதவர்க்கு மாதம் 1-க்கு ஆயிரக்கணக்காயோ இலக்ஷக்கணக்காயோமிகுக்கும்படி யிருப்பது அவர்க்குச் செல்வம். அவரவர் நிலைமைக்குத் தக்கபடி மிகுக்கும் தொகை வேறுபட்டாலும் மிகுப்பதால் ஆகும் சந்தோஷம் எல்லார்க்கும் ஒரே அளவுதான். பெருத்த வரும்படியிருந்து மிகுக்கவும் கையாலாகாமல் கடனும் படாமல் தம் வாழ்க்கையை நடத்திப்போகிற திறமை சிலர்க்குண்டு. எவ்வளவு திறமையிருந்தும் தெய்வீகமாய் இடுக்கண் நேரிட்டு எதிர் பார்க்காத செலவு நேரிடலாமாகையால் மிகுக்கவேண்டும் என்கிற ஆசை மனிதர்க்கியல்பாகி

* Nebulæ. † Balloons.

‡ Books consulted. 1. Chambers's Journal, 25th November 1893.
2. The Hon. S. Srinivasa Raghava Iyengar's 'Madras during 40 years.'
3. Mr. Dadabhai Naoroji's Congress Address 1893.

யது. இந்த ஆசை இயல்பாக, மிகுக்கும் தொகை இனிமேல் இடுக்கண் நேரிடக்கூடியகாலத்து வேண்டியதற்கும் மேலாகி ஏராளமாய் மிஞ்சிக்கிடக்கவேண்டும் என்னும் ஆசையும் வழக்கமாயிற்று. மிகுக்கும் தொகை எவ்வளவாயினும் மிகுக்கும்படியான தசையிருப்பதில் எல்லார்க்கும் சந்தோஷம் ஒரே அளவுதான்.

செல்வத்தால் கிடைக்கும் சந்தோஷமிருவகைப்படும்: புதிய பொருள் மேன்மேலும் தேடும் முயற்சிச் சந்தோஷம், தேடிக் கைகூடியதை இருப்பாய் நினைத்து அவ்வளவு இருப்பு உண்டாயிருக்கிறதை நினைக்கும் சந்தோஷம், என இருவகையாம். மேன்மேலும் பொருள் சேர்க்கப்பாடுபடும் சந்தோஷம் எல்லாருக்கும் ஓர் அளவுதான். சேர்ந்தது பலபேரிடத்தில் பல அளவானாலும் அவரவர்களுக்குத் தங்கள் கைப்பொருள் பெரிதாதலால், அதனால் வரும் சந்தோஷம் எந்நிலைமையார்க்கும் ஒரே அளவுதான். மிகுதிப் பணம் தம் காரியங்களுக்கு உதவியில்லாததினால் இருப்பு என்ற நினைப்பினாலாகும் சந்தோஷம் வருவது தவிர, அதிகலாபம் தொகையிருப்பிலில்லை. கையிருப்பையும் வேலையில் போட்டு அதைச்சரிவரப்பார்க்க மனமிருந்தால் இப்படிவேலையில் உழைப்பதால் சந்தோஷம் உண்டாம். நான்கு பேர் வேலைக்காக தமது சொற்படி நடக்கும்படியாயும், தம்மையடுத்துப் பிழைக்கும்படியாயும், தமது கையிருப்பு வளரும்படியாயுமிருப்பதில் சந்தோஷம் உண்டு.

ஏராளச் செல்வ இருப்புக்கு ஒரு வகையில் தோஷம் சொல்லலாம். அத்தனையையும் தாமே சம்பாதித்தவரானால் அதை அவர் நல்லவழியிலாவது கெட்டவழியிலாவது சம்பாதித்திருக்கலாம். கெட்டவழியில் மோசத்தால் சம்பாதித்திருந்தால் அவரால் நஷ்டமடைந்தவர் இருப்பர். அவர்கள் துக்கப்படப் பொருள் அடைந்தவர் வாழ்வது வாழ்வல்ல. நல்வழியால் சம்பாதித்தவரானால் அதற்கு அவரிடத்தில் எவ்வளவோ திறமை இருந்திருக்கும்; அத்திறமையவர் அந்த இருப்பைச் சரியானவழியில் போட்டுப் பெருக்கிப்பார்த்து வருவதில் சந்தோஷப்படுவர். ஏராளச்செல்வம் உண்டானபின் நல்லவர்க்கும் புத்திகெடலாம். பிறர் தேடித் தாம் அடைந்ததானால் புத்தியும் நல்ல தனமும் இல்லாமல் இருப்புமாத்திரம் உண்டாயிருப்பதில் வீண்செலவு நேரிட்டுப்போம். ஏராளச்செல்வத்தைக்காப்பாற்றுவதில் அசாத்திய உழைப்பு வேண்டியிருக்கும், தேகம் அவ்வளவுக்கு இடம் கொடாமல் நிற்கும். கணக்குக்கும் எட்டாத ஏராளச் செல்வமானால் புத்திசாலிகளுக்கும் சரிவர வழங்கத் தெரியாமல் போய்விடும்.

உழைப்பு மிகுதியாய் வேண்டியிருப்பது பொருள் அடைவதிலா, அடைந்த பொருளைக் காப்பாத்துவதிலா என்றால், காப்பாத்துவதிலேயே விசேஷத்திறமை வேண்டியிருக்கும். அநுகூலமாகச்சமயங்கள் நேரிட்டுப் பொருள் எளிதில் சேர்ந்துவிடும்; சேர்ந்ததை நஷ்டப்படாமல் காப்பாற்றுவது சிறந்ததிறமை. ஆனாலும் பாடுபடவேண்டியது நமது கடமையாதலால் பெருத்த இருப்பை வேலையில் விட்டுப் பத்துப்பேர் பிழைக்கும் படிக்கும் இருப்புக்கு அழிவின்றி கையிருப்பு வளரும் படிக்கும் செய்வது புத்திசாலிக்கடையாளம்.

### நாட்டுச்செல்வம்.

இப்படியெல்லாம் பார்ப்பது குடிச் செல்வத்தைக் குறித்தது. தேச மொத்தத்துக்குச் செல்வம் எப்படிப்பட்டது என்பதைக்குறித்து இனிமேல் யோசிப்போம்.

யாதாமொரு தேசத்தில் ஒருகுடும்பம்கூட வறுமைப்படாமலிருக்காது. முதல் தரமான நாடானாலும் அவரவர் யுத்திக்குறைவாலும் தெய்வீகத்தாலும் சிலர்க்கு வறுமை எப்படியும் நேரிடும். நாட்டு மொத்தத்துக்கு பெரும்பாலார் வருந்தினால் நாடு வறுமையடைந்ததென்றும், சிறுபாலார்மட்டும் வருந்தினால் நாடு சீர்ப்பட்டதென்றும் சொல்லலாம். ஒரு நாட்டில் பெரும்பான்மையான குடித்தனம் செல்வமாயிருந்து வறிய குடித்தனங்கள் சொற்பமானால் அந்நாடும் செல்வம் உடையதே. எப்படித் தனிக்குடியினர்க்கு வேண்டிய பொருள் மட்டுமிருப்பது செல்வமாகாமல், அவர் கைப்பொருளிருப்பு அவருக்கு வேண்டிய அளவிற்கு மிஞ்சியிருந்து அப்பொருள் மாறும்படியானால் அது செல்வமாகிறதோ, அப்படியே நாட்டின் விளைபொருள் செய்பொருள் நாட்டில் வேண்டிய அளவுக்கு மிஞ்சி மற்ற நாட்டாரிடத்தில் மாறும்படியாயிருப்பது நாட்டு வளப்பமாம். இப்படி நாட்டு வளப்பத்தைச்சேர்ந்த சில சங்கதிகளைக் கீழே சிலநாடுகளுக்கு எடுத்துக்காட்டுகிறேன்.

### அமெரிக்காவில் ஐக்கியமாகாணங்கள் என்று பொருள்படும் 'யூனைடெட்ஸ்டேட்ஸ்' என்னும் நாட்டிலுள்ள குடிகளின் ஆஸ்தி.

(PRIVATE WEALTH IN THE UNITED STATES.)

(1) அந்நாட்டில் 70 குடும்பத்தாரிடத்தில்மட்டும் 540 கோடித் திரவியம் இருக்கிறதாம். அதாவது குடும்பம் ஒன்றுக்கு, 8-க்கோடி ரூபாய் ஆஸ்தியாகிறது. அதனில் ஒரு குடும்பத்தாருக்கு 30 கோடி ரூபாய் ஆஸ்தியாம்.

(2) 50 குடும்பத்தாரிடத்து மொத்தத்தில் 100 கோடி ரூபாய் இருக்கிறதாம்.

(3) பென்ஸில்வேனியா (Pennsylvania) மாகாணத்தில் 63 கோடீஸ்வரர்களிடத்து 60 கோடி ரூபாய் இருப்பு உண்டாம்.

(4) நியுயார்க்கு (New York) பட்டணத்திற்கு அருகாமையில் 60 பேரிடத்தில் 100 கோடித் திரவியம் உண்டாம்.

(5) பாஸ்டன் (Boston) பட்டணத்தில் வருஷத்திற்கு 20 லக்ஷம் வருமானம் வருவதாய் அதன்மேல் வரிகட்டுகிறவர்கள் 50 பேர் உண்டாம்.

(6) மிஸ்டர் தாமஸ் ஜி. ஷியர்மன் (Mr. Thomas G. Shearman) போட்ட கணக்குப்படி ஐக்கிய நாட்டில் முதல்தரப் பணக்காரர் 100 பேருக்கு வருஷத்தில் ஒவ்வொருவருக்கும் 9 லக்ஷம் வரும்படியாம். அந்நாட்டிலுள்ள மற்றவர்களில் 100-க்கு 80 குடும்பத்தவர்களுக்கு வருஷ வரும்படி 1,000 ரூபாய்க்குமேல் இல்லையாம். ஐக்கிய நாட்டுக் குடிகளின் மொத்த திரவியத்திலே பாதி 25,000 பேரிடத்தில் அடக்கமாம். ஆகையால் மேலே கண்ட நாட்டில் சில குடித்தனங்கள் கங்கற்ற பெருவாழ்வும் வெகு குடித்தனங்கள் சாமான்னிய வாழ்வும் உடையவர்களா யிருக்கிறார்களென்று தெரியவருகிறது.

### இங்கிலாந்தில் சிலபேர்ஆஸ்தி.

(PRIVATE WEALTH IN ENGLAND.)

காலஞ்சென்ற ராத்சைல்ட்பிரபு (Baron Rothschild), ஓவர்ஸ்டன் பிரபு (Lord Overstone) இவர்கள் இருவரும் சாகும்போது அவர்களுக்கு தனித்தனி 3½-க்கோடி ரூபா ஆஸ்தியிருந்தது.

டட்லி பிரபுவுக்கு (Lord Dudley) அவர் சாகும்போது 4 கோடி ரூபா ஆஸ்தியிருந்தது.

பக்லோ டியூக்பட்டவர்த்தனர் (Duke of Buccleuch) சாகும்போது அவருக்கு 6 கோடி ரூபா ஆஸ்தியிருந்தது.

உயிரோடு இருக்கும் ஒரு பிரபுவுக்கு 10-க்கோடி ரூபா இருக்கிறது.

இன்னொருவருக்கு 8-க்கோடி ரூபா இருக்கிறது.

1884-ம் வருஷம் கணக்குப்போட்டபோது வருஷத்திற்கு வியாபாரத்தால் 5 லக்ஷம் ரூபா வருமானம் உடையவர்கள், 104 பேர்தான் இருந்தார்களாம்.

1886-ம் வருஷத்தில் 25 லக்ஷம் ரூபா ஆஸ்திக்கு அதிகாரப்பத்திரம் பெற 11 மனுக்கள்தான் தாகல் ஆயிற்றும். அரசிறைமந்திரியாயிருந்த மிஸ்டர் கோஷன் அவர்கள் (Mr. Goschen) வருமான வரிஜாப்தாவைப் பிடித்து 10 வருஷ ஏற்ற வித்தியாசத்தைப் பார்த்தபோது—

(a) 5,000 ரூபா வரும்படிக்காக வரிகட்டினபேருடைய மொத்தம் 10 வருஷத்தில் 100-க்கு 21 ஜாஸ்தி ஆனதாம்;

(b) 10,000 ரூபா வரையில் வரும்படிக்கு வரி செலுத்தினவர்கள் ஏறவே இல்லையாம்.

(c) 10,000 ரூபா முதல் 50,000 ரூபா வரையில் வருமானத்திற்காக வரி செலுத்தினபேர்மொத்தம் 100-க்கு 2 இறங்கிற்றும்.

(d) அப்படியே 50,000 ரூபாவுக்குமேல் வரும்படி உள்ளவர்களுடைய மொத்தமும் 100-க்கு 2 குறைந்ததாம்.

(e) 8,000 கோடி ரூபா சுமார் 70 லக்ஷம் குடும்பங்களில் தங்கியிருந்ததாம்.

ஐக்கிய நாடுகளைப்போல இங்கிலாந்தில் கோடிக்கணக்கான ஆஸ்தியையுடையவரைக்காணோம். கோடீசுவரர் இரண்டொருவர்தான் : ஆனால் மிதந்த வரும்படி பரவிய குடும்பங்கள் ஐக்கிய நாட்டைவிட ஆயிரமடங்கதிகம்.

(இன்னும் வரும்.)

டி. ஆர். இராமநாதய்யர், பி. ஏ., எல். டி.

## வெனிஸ் வணிகன் கதை.

3-ம் அங்கத்தின் கதைச்சுருக்கம் :—

அன்டோனியோவின் நண்பர்களாகிய முற்சொல்லிய 'ஸாலரீனோ' 'ஸல்லானியோ' என்ற இருவரும் அவனுடைய பெரிய கப்பல்களிலொன்று தரைதட்டி விலையுயர்ந்த பண்டங்களோடு சேதப்பட்டதாகக் கேள்வியுற்று மிகவும் மனம்வருந்தி, ஐயோ, ஸர்வஜன மித்திரனான அன்டோனியோவுக்கு இத்துன்பம் நேரவேண்டுமோ? இச்செய்தி பொய்யாய்ப்போகாதோ? அவனுடைய நஷ்டம் இவ்வொரு கப்பலோடாவது முடிவுபெறவேண்டுமேயென்று பேசிக்கொண்டிருக்கையில், அங்கே வரும் ஷைலாக்கைக்கண்டு வணிகருக்குள் என்ன செய்தியென்று கேட்க, பஸ்ஸானியோவின் வீட்டில் விருந்துண்டு திரும்புவதற்குள் தன் மகளாகிய ஜெஸ்ஸிகாவையும் அவளுடன் திரண்ட திரவியத்தையும் பறிகொடுத்த ஷைலாக், இந்நஷ்டத்தையும், உதாரச்செலவால் கைம்முதல் தொலைந்ததாலும் கப்பல் சேதப்பட்டதாலும் மிக்க வறியோனாய் 'ரியால்டோவில்' முகங்காட்ட நாணுறும் அன்டோனியோவுக்குக் கடன்கொடுத்ததாலுண்டான நஷ்டத்தையும்பற்றித் துக்கித்துச்சொல்ல, ஸாலரீனோ, "குறித்தகாலத்தில் அவன் பணங்கொடுக்கத் தவறினால், பத்திரப்படி, அதற்கு அபராதமாக அவன்

தசையைக் கேட்கமாட்டாயென்று நம்புகிறேன். அத்தசையால் உனக்கென்னபயன்'' என்றான். அதற்கு ஷைலாக், "அதைக்கொண்டு வேறொன்றும் இல்லாவிடினும், என் வயிற்றெரிச்சலையாவது ஆற்றிக்கொள்வேன். அவன் என்னை எத்தனையோமுறை அவமானப்படுத்தியிருக்கிறான்; எனக்கு அரைக்கோடிப் பொன்வரையில் நஷ்டம் வருவித்திருக்கிறான்; என் நஷ்டத்தைக்கண்டு பலமுறையும் சிரித்திருக்கிறான்; எனக்கு வட்டியால் வரும் இலாபத்தை இகழ்ந்து பழித்திருக்கிறான்; என் நண்பரை என்னிடத்தினின்றும் பிரித்திருக்கிறான்; என்பகைவரை எனக்கு விரோதமாத்தூண்டி எழுப்பியிருக்கிறான். இத்தனையும் எதற்காக? நான் யூதனாயிருப்பதற்காக. என், யூதனுக்குக் கண்ணில்லையோ? கையில்லையோ? கருவிகரணங்களில்லையோ? கோபதாபங்களில்லையோ? கிறிஸ்தவனைப் போல் யூதன் உண்ணவில்லையோ ஒரே கத்தி இருவரையும் புண்படுத்தவில்லையோ? இருவருக்கும் ஒரே வியாதி வருவதில்லையோ? அவ்வியாதி ஒரே மருந்தால் நிவிர்த்தியாவது மில்லையோ? எங்களைக் குத்தினால் எங்களுக்கு இரத்தம்வாராதோ? கூச்சங் காட்டினால் நாங்கள் சிரியோமோ? விஷமுண்டால் இறவோமோ? நீங்கள் துன்பப்படுத்தினால் நாங்கள் பழிவாங்கோமோ? மற்றெல்லாவற்றிலும் உங்களைப் போலிருக்க, இதிலும் ஏன் நாங்கள் உங்களைப்போல் இருக்கக்கூடாது? நீங்கள் கற்பிப்பதையே, நான்செய்வேன்'' என்று தன் மனக் கொடுமையை யெல்லாம் வெளியிட்டான். பின்னர் ஸாலரீனோ, ஸல்லானியோ இருவரும், தங்களை அன்டோனியோ அழைக்கின்றானென்றுபோக, அப்பொழுது அங்கேவந்த தன்னினத்தோனாகிய 'ட்யூபால்' என்பவனை தன் மகளின் செய்தி என்ன வென்று ஷைலாக் கேட்க, அவன், தான் அவளைப்பற்றிக் கேள்விப்பட்டுச்சென்ற விடங்களில் ஒன்றிலும் அவளைக் காணவில்லையென்றும், ஆனால் அவள் போகுமிடங்களில் பணத்தை வாரிச்செல விடுகிறாளென்று நான் கேட்டேனென்றும், 'ட்ரிபொலிஸ்' என்னுமிடத்திலிருந்துவந்த அன்டோனியோவின் பெரிய கப்பலொன்று திசை தப்பிப் போயிற்றென்றும், அவனுக்குக் கடன் கொடுத்திருப்பவர்கள் பலரும் வெனிஸ்ஸுக்கு வந்திருக்கிறார்களென்றும் சொன்னான். இதைக்கேட்ட ஷைலாக், "ஐயோ, இரண்டாயிரம் பொன்னை யிழந்தேன்; ஒரு நல்ல வயிரம் போய்விட்டதே. எவ்வளவோ விலை பெற்ற நகைகளையும் அவள் கொண்டு போய்விட்டாளே. இந்நகைகளோடு அவள் என் காலடியில் விழுந்து இறந்தாதான் போனாளா? இப்படிப்பட்ட துக்கம் என் சாதிக்கே வந்ததில்லையே. எனக்கும் இதுவரையில் வந்ததில்லை. வேறொருவருக்கும் இப்படிப்பட்ட துக்கத்தைக்காணேன்! நான் ஒழிய மற்றொருவரும் கண்ணீர் விடும்படியான துக்கம் அநுபவிக்கிறார்களில்லையே. ஆனால், அன்டோனியோ, தன் பொருளையெல்லாம் இழந்து மிடியுற்றானென்ற நற்செய்திகேட்டுச் சந்தோஷிக்கிறேன். அவனையினி வாட்டுவேன். அவன் தவறும் பக்ஷத்தில் அவன் இருதயத்தைப் பறிப்பேன்'' என்று கடுஞ்சொற்கூறி, தன்னைப் பின்னர்ச்சந்திக்கும்படி ட்யூபாலுக்கு விடைகொடுத் தனுப்பிவிட்டுத் தான் வெனிஸ் அரசனிடத்திலிருந்து சிறைச்சாலை யதிகாரிக்கு அன்டோனியோவைப்பிடித்துப் பத்திரப்படுத்தும்படி கட்டளை பிறப்பித்தான். அக்கட்டளைப்படி அன்டோனியோ, சிறைச்சாலை அதிகாரியின் வசமான பின், ஷைலாக்கைப் பலவிதத்திலும் மன்றாடிக்கேட்டுக்கொண்டும் அவன் அன்டோனியோவின் பிரார்த்தனையொன்றுக்கும் செவிகொடாது "பத்திரத்திற் சொல்லிய அபராதத்தை உன்னிடத்திருந்து வாங்காதிரேன். என்னை நாய் என்றாயே; நாயின் பற்கூர்மையைப்பார். உன் பேச்சைக் கேட்கவேண்டேன்; நான் உன் பேச்சுக்கிரங்கும் மடப்புத்தியுடையேனல்லேன். இனியொன்றும் பேசாதே. பத்திரப்படி அபராதத்தையே வாங்குவேன்.'' என்று புண்படச்சொல்லிப்போனான். பின்னர் அன்டோனியோ, "அவன் என் பிரார்த்தனைக்கு இணங்காததற்குக் காரணமிருக்கிறது. அவனது கடுமையினின்றும் அநேகருக்கு உதவிசெய்து நிவிர்த்தியுண்டாக்கியிருக்கிறேன். நான் என் பத்திரப்படிக்குள்ள அபராதத்தைச் செலுத்துவதில் மரணமடைய வேண்டியவனே. யூதனுடைய கருத்து இதுவே. அரசனுக்கும் இதைத்தவிர்க்க அதிகாரமில்லை. அரசனும் சட்டப்படிதானே நடக்கவேண்டும். அன்றெனின் இராச்சியத்தின் நீதி கெட்டுப்போம். எனது துக்கத்தையும்தேக மெலிவையும் யோசிக்கும்பொழுது நாளைக்கு யூதனுக்குக் கொடுக்க ஒரு பவுண்டு நிறையுள்ள தசை என் தேகத்தில் அகப்படுமோவென்று சந்தேகப்படுகிறேன். ஓ! கடவுளே, நான் பஸ்ஸானியோவின் கடனைக்கொடுப்பதை அவன் வந்து பார்க்கும்படி அருள்புரிவாயாக. பிறிதொன்றும் வேண்டேன்'' என்று துயரமுற்ற மனத்தினனாய் சிறைச்சாலையதிகாரியை நோக்கி இனித் தன்னைக் கொண்டுபோகலாமென்றான். இங்கு இது நிற்க.

பெல்மாண்டில், பஸ்ஸானியோவின் வரவு கேட்டு இன்புற்றிருந்த போர்ஷ்யா, அவன் வந்தவுடன் அவனை நோக்கி "இன்னும் இரண்டொருநாள் என்னோடு இருந்தபின், நீ பெட்டியை எடுப்பாயாக. இப்

பொழுதே எடுக்கப்புகுந்து தவறுவாயாயின் உனது அருகிருத்தலை யிழப்பேனே. ஆதலின், சற்றுப்பொறுக்க. என்னுள்ளில் ஏதோ ஒன்று உன்னை நான் இழக்கமாட்டேனென்று சொல்லுகின்றது. என் உட்கருத்தை வெளியிட்டுச்சொல்வது கன்னித்தன்மைக்கு அடுத்ததன்றே. சரியான பெட்டி இன்னதென்று உனக்கு நான் சொல்லக்கூடும். ஆனால் அப்பொழுது நான் சத்தியம் தவறினவளாவேன். என்னில் ஒரு பாதி நீ; மறுபாதியும் நீயே. ஆதலின் நான் உன்னுடைமையே. ஆ! என்ன கெட்டகாலம்! உடைமைக்கும் அதை உரியவர்க்கும் இடையில் என்ன இடறுகட்டைகள்!" என்று இவ்வாறு சொல்லிக்கொண்டு காலதாமதஞ்செய்ய, பஸ்ஸானியோ 'நான் முள்ளின்மேலிருப்பதுபோல் இருக்கிறேனே! என்னால் பொறுக்கவொண்ணாது, பெட்டியை எடுப்பேன்" என்று போய் பொன் வெள்ளி ஈயப்பெட்டிகளைக் கண்ணுற்று "இவ்வுலகம் வெளியலங்காரத்தைக்கண்டு மயங்குகின்றது. அநியாயக் கட்சியிற்றான், நயமும் மனம் உருகும்படியான வார்த்தையுமுள்ளன. எங்கே துன்மார்க்கமதிகமோ அங்கேதான் ஸன்மார்க்கத்துக்குரிய அடையாளங்கள் புறத்து அதிகமாய்க்காணப்படுகின்றன. கையாலாகாத பெண்மையோர் எத்தனைபேர், சூரரைப்போல் முகரோமமுடையோராய் வீரம் பேசுகிறார்கள். எத்தனைபேர் பொய்க்கூந்தலால் தம் தலையழகைக் காட்டுகிறார்கள். கபடமானது மெய்யின் உருவத்தைத் தரித்து மெய்போல் தோன்றலால் அதைக்கண்டு விவேகிகளும் மயங்குகின்றனர். ஆதலின், ஓ! பளபளக்கும் பொன்னே, நான் உன்னை வேண்டேன். வெளிறினதாய வெள்ளியே உன்னையும் வேண்டேன். பயமுறுத்தும் ஈயமே உன்னையெடுப்பேன். இன்பம் இதின்பயன் ஆகுக." என்று ஈயப்பெட்டியைத்திறந்தான். அதனுள்ளே, அங்குமிங்கும் ஓடுவன போன்றிருக்குமிருவிழியையும், மணமுள்ள சுவாசத்திற்கு வழிவிட, பிரியாத இரண்டு நட்பினர் பிரிந்திருந்தாற்போன்ற இரண்டு உதட்டையும், மனிதருள்ளத்தைத் தன்னகப்படுத்துவதற்குள்ள வலைக்கண்போன்ற கூந்தலின் பொற்சுட்டையும், சித்திரிகன் இப்படத்தின் ஒருவிழியை எழுதியபின்னர், அதனொளியால் தன்னிருவிழியின் ஒளியையும் இழவாது படத்தின் மறுவிழியை எப்படி யெழுதினனென்று சொல்லத்தக்க விழியினழகையுமுடைய போர்ஷ்யாவின் வடிவமைந்த படத்தைக்கண்ணுற்றான். தன் வார்த்தையின் அளவுக்கு அப்படத்தினுருவம் மிக மேற்பட்டதென்று கண்டான். அவ்வாறே அவளுடைய மெய்வடிவும் அதன் போலியாகிய படத்தின் வடிவத்திற்கு மேற்பட்டதென்றும் கண்டான். பின்னர் அங்கிருந்த காகிதச்சுருளில் "நீ வெறும் தோற்றத்தைக்கண்டு மயங்கவில்லையாகையால் நல்ல அதிர்ஷ்டம் பெற்றுச் சரியானதைத்தேர்ந்தாய். உனக்கு இப்பாக்கியம் வாய்த்ததால் பிறிதொன்றும் கருதாது அமைதியோடிருக்க. இதனால் உள்ளங்குளிர்ந்து இப்பாக்கியத்தை உன் பேரின்பமெனக்கருதுவையாயின், உனது மணமகளிருக்கு மிடத்தை நாடி அன்புகூர்ந்த முத்தத்தால் அவள் உன்னுடைமையென உரிமைபாராட்டுக" என்று எழுதப்பட்டிருந்ததைப் படித்துப் பார்த்துப் போர்ஷயா விடஞ்சென்று "சீருள்ள குலமாதே, என் ஆநந்தப்பெருக்கால் நான் மயங்கித்திகைக்கின்றேன். நான் காண்பது மெய்யோவென்று ஐயமுறுகின்றேன்; நீ உறுதி நல்கினாலன்றி நான் தெளியேன்" என்றான். அதற்குப் போர்ஷயா, "பஸ்ஸானியோ, என்னதிபனே, நான் நிற்கின்றவிடத்தில் என்னைக்காண்கிறாயே; இதுதான் எனக்கு எப்பொழுதுமுள்ள நிலைமை; உன்பொருட்டு, நான் இதிலும் அறுபதுமடங்கு மேலான நிலைமையிலிருக்க ஆசைப்படுகின்றேன். இன்னும் ஆயிரமடங்கு அதிக அழகும் பதினாயிரமடங்கு அதிகச்செல்வமும் உடையேனாயினன்றோ, உனக்கு நான் ஒருவாறு ஏற்றவளாவேன். அழகையும் ஆஸ்தியையும் நண்பரையும் கணக்கில்லாமலுடையேனென்னினும் நான் படிப்பும் பயிற்சியும் பழக்கமும் இல்லாத சிறுபெண்ணாயிருக்கிறேன். நான் இன்னும் படிப்புக்குப் பிராயம் தப்பாத நிலைமையிலிருப்பது எனது பாக்கியமே; படிப்பு வாராத மந்த வழியில் நான் பயின்றிராதது அதைவிடப் பெரிய பாக்கியம்; இவை யெல்லாவற்றிலும் மேலான பாக்கியம் யாதெனின், என்னரசனும், அதிபனும், நாதனுமாகிய உன்னுளங்கையின் ஆதீனத்தில் என்னை ஒப்பித்திருக்கிறேனென்பதுதான். நானும் என்னுடைமையும் இப்பொழுது நீயும் உன்னுடைமையுமாய் மாறினோம். சற்றுமுன்வரையில், என் இவ்வழகிய அரண்மனையும், இவ்வேலைக்காரரும், நானும் எனக்கு ஸர்வசுவதந்திரமுள்ள பொருள்களாயிருந்தோம். என் நாதனே, அவற்றையெல்லாம் இப்பொழுது இம்மோதிரத்தோடு உன்னிடம் ஒப்பிக்கின்றேன். இம்மோதிரம் எவ்விதத்திலேனும் உன்னைவிட்டு நீங்குமாயின், அது நமது நேசத்திற்கு இடையூறு என்றறிக; அப்பொழுது உன்மேல் குறை கூற எனக்குக் காரணமுண்டாம்." என்று இவ்வாறு இனிய மொழிகூறித் தன் மோதிரத்தை அவன் கையிலிட, பஸ்ஸானியோ, "குலமாதே, என்னை வாய்பேசாமற் செய்துவிட்டாயே; தக்க மறுமொழிக்கு ஊற்றம் பெற்றிலேன். இம்மோதிரம் என்விரலைவிட்டு நீங்கு நாள், என் வாழ்நாள் முடியுநாளே" என்றான். பின்னர்

பஸ்ஸானியோவும் போர்ஷ்யாவும் கலியாணஞ்செய்துகொள்ளும் பக்ஷத்தில், தாங்களும் கலியாணஞ்செய்துகொள்வதாக ஏற்பாடு செய்திருந்த க்ரேஷ்யானேவும் நெரிஸ்ஸாவும் அவ்வேற்பாட்டைத் தெரியப்படுத்தித் தங்களுடைய விவாகத்திற்கும் அநுமதி பெற்றார்கள்.

இங்ஙனம் யாவரும் இன்புற்றிருக்கும் சமயத்து, லோரன்ஜோவும், அவன் காதலியாகிய ஜெஸ்ஸிகாவென்னும் யூதமாதும் அன்டோனியோவின் வேலைக்காரனை ஸலீரியோவும் அங்கேவர, அவர்கள் நல்வரவுகூறி உபசரிக்கப்பட்ட பின்னர், ஸலீரியோ, தனது எஜமானனாகிய அன்டோனியோ, க்ஷேமம் விசாரித்தார் என்று சொல்லி, பஸ்ஸானியோவிடத்தில் ஓர் கடிதத்தைக்கொடுத்து அக்கடிதத்தால் சகல விவரமும் தெரியவருமென்றான். பின்னர், கடிதத்தைப்படிக்கையில் பஸ்ஸானியோவின் முகம் நிறங்குறைந்து வாடுவதைக்கண்டு, போர்ஷ்யா, "கடிதத்தில் என்ன செய்தியோ? பிராணபதமான நண்பனிறந்தானோ? வேறொன்றும், மன உறுதியுடையோரை இப்படி மாற்றிக்காட்டாதே! வரவர அதிகக் கெடுதியாய்த் தோன்றுகின்றதே! பஸ்ஸானியோ, அநுமதி தந்தருள்வாய்; நான் உன்னிற் பாதியன்றோ? இக்கடிதம் உனக்குக் கொண்டுவருவதில் பாதி எனக்குமுண்டு" என்றுகூற, பஸ்ஸானியோ "ஓ! இனிய போர்ஷ்யாவே, மிக்க மனக்கிலேசமுண்டாக்கும் வார்த்தைகளிற் சில இதில் எழுதப்பட்டுள்ளன. குலமாதே, எனக்கு உன்மேலுள்ள அன்பை நான் உனக்கு முதலில் அறிவித்த காலத்து எனக்குள்ள ஆஸ்தியெல்லாம் என் நற்குலமேயொழிய வேறொன்றுமில்லையென்றேன்; அப்பொழுது நான் சொன்னது உண்மையே. ஆனால், இனிய மாதே, ஒன்றுமில்லேனென்று சொல்லியகாலத்து, எந்நிலைமை, ஒன்றுமில்லா நிலைமையிலும் இழிந்ததென்று நான் சொல்லத்தவறினேன். எனக்குப்பணங்கொடுத்து உதவுவதற்காக, என்நண்பனை அவனுடைய பரமசத்துருவின் கடனாளி யாக்கினேன்; ஆதலின், என் நண்பனுக்கு நான் கடன்கொடுக்கக் கட்மைப்பட்டிருக்கிறேன். மாதே, இக்காகிதத்தை என் நண்பனின் உடம்பாகவும், அதிலுள்ள ஒவ்வொரு வார்த்தையையும் அவ்வுடம்பிலுள்ள, வாய்பிளந்து இரத்தம் உகுக்கும் புண்ணாகவும் பாவிக்கின்றேன். ஸலீரியோ, அவனுடைய எல்லாக்கப்பல்களுக்கும் மோசம் வந்துவிட்டதென்பது மெய்தானோ? ஒன்றும் சரியாய்ப் போய்வரவில்லையா? 'ட்ரிபொலிஸ்' 'மெக்ஸிகொ' 'இங்கிலாண்டு' 'லிஸ்பன்' 'பார்பரி' 'இந்தியா' இவ்விடங்களிலிருந்து வந்த கப்பல்களொன்றேனும் கடலிலுள்ள பாறைகளுக்குத் தப்பவில்லையோ?" என்று மிக்க மனக்கவலையோடு கேட்க, ஸலீரியோ "என்னாண்டவனே, ஒன்றுகூடத் தப்பிவரவில்லை. இஃதன்றி, இப்பொழுது யூதன் பணங்கொடுத்தாலும் வாங்கமாட்டேனென்கிறான். மானிட உருவத்தில், இவ்வளவு கொடுமையும், பேராசையுமுள்ள பிராணியையே நான் இதுவரையிலும் கண்டதில்லை. அவன் இரவும் பகலும் அரசனிடத்து மன்றாடுகிறான்; தனக்கு நீதி செய்யாவிடின் இராசாங்கத்திலேயே நடுவு நிலையான நெறி யில்லையென்கிறான். அரசனும், எத்தனையோ வணிகர்களும், பிரபுக்களும் கல்லும்கரையும்படியான வார்த்தைகளால் அவன் மனத்தைத் திருப்பப்பார்த்தார்கள். அவன் ஒன்றுக்கும் அசையாது ஒரே பிடியாய் என் பத்திரப்படிக்குள்ள அபராதத்தை வாங்கியே விடுவேனென்கிறான்" என்றான். அதைக்கேட்ட ஜெஸ்ஸிகா, தானும் அவன் அப்படிச் சபதஞ் செய்யக்கேட்டிருக்கிறேனென்றும், ஊர்ச்சட்டமும் நியாயமும் அதற்கு இடங்கொடுக்கும்பக்ஷத்தில் அவன் அப்படிச்செய்யும் கொடியவனே யென்றும் சொன்னாள். இவற்றையெல்லாம் கேட்டிருந்த போர்ஷ்யா, பஸ்ஸானியோவைநோக்கி இவ்வாபத்திலுள்ளவன் உன் நண்பனோ வென்றாள். அதற்கு பஸ்ஸானியோ 'ஆம், எனது பிராணபதமான நண்பன்; யாரிடத்தும் மிக்க அன்புடையவன்; நல்ல நிலைமையிலுமுள்ளவன்; இத்தலியிலேயே அவனைப்போல் அவ்வளவு பலபெருந்தகைமையு முள்ளவரில்லை" என்றான். பின்னர்ப் போர்ஷ்யா, அவன், யூதனுக்கு எவ்வளவு கடன் கொடுக்கவேண்டுமென்று கேட்க, பஸ்ஸானியோ, "மூவாயிரம்" என்றவுடன் "இவ்வளவுதானா? ஆறாயிரமாய்க் கொடுத்துப் பத்திரத்தைக்கிழித்தெறி. அதையும் இரட்டிக்க; மும்மடங்காக்குக; நீ சொல்லிய நண்பன் உன்னுடைய குற்றத்தால் ஒரு ரோமமேனும் இழக்கற்பாலனல்லன். முதலில் கோயிலுக்குப்போய் என்னை மனைவியென்றழை; உடனே வெனிஸ்ஸிலுள்ள உன் நண்பனிடத்துப்போ; உனக்கு இங்கிருக்க மனங்கொள்ளாது. கடன் தொகைக்கு இருபது மடங்கான தொகையைக் கையிற்கொண்டுபோ. கடனைத் தீர்த்தபின் உன் நண்பனை இங்கே அழைத்துவா. இப்பொழுது அவனுடைய கடிதத்தைக்கேட்க விரும்புகிறேன்" என்றாள். அப்பொழுது பஸ்ஸானியோ, "இனிய பஸ்ஸானியோ, என் கப்பல்களெல்லாம் தப்பிப்போயின; எனக்குக் கடன் கொடுத்தவர்கள் மிக்க கடுமை காட்டுகிறார்கள்; நான் தீனஸ்திதியிலிருக்கிறேன். யூதனுடைய பத்திரத்திற்குக்காலாவதி ஆய்விட்டது; அதற்கு அப

ர்ாதம் செலுத்துவதில் நான் பிழைப்பது அசாத்திய மாகையால், என் மரணசமயத்தில் உன்னை நான் பார்க்கும்படி மாத்திரம் நேருமாயின் நமக்குள்ள கடனெல்லாம் தீர்ந்தனவாகும். நான் இப்படி எழுதியபோதிலும் நீ உன் சௌகரியம்போற் செய்க. என்மேல் உனக்குள்ள அன்பு உன்னை இங்கே வரத் தூண்டாதாயின், என் கடிதமும் தூண்டாதொழிக" என்று படிக்கக்கேட்ட போர்ஷ்யா, ஓ! நேசனே, காரியங்களை விரைவில் முடித்து உடனே புறப்பட்டுப்போ" என்று சொல்ல, பஸ்ஸானியோ, "உன் நல்ல அநுமதியோடு போகின்றேன். விரைவில் காரியத்தை முடித்துவருவேன். ஒருபொழுதேனும் அநாவசியமாய்த்தாமதியேன்" என்று வெனிஸ்ஸுக்கு விடைபெற்றுச் சென்றான்.

இதன் பின்னர், போர்ஷ்யா தன்னுள்ளே சிலவற்றை ஆலோசித்துக்கொண்டு லொரென்ஜோவைப் பார்த்து "எனக்கு ஓரிடத்தில் சில பிரார்த்தனை செலுத்தவேண்டும்; என் நாயகர் திரும்பிவருவதற்குள் நான் அப்பிரார்த்தனையைச் செலுத்திவருவேன். நேரிஸ்ஸா மாத்திரம் என்னுடன் வந்தாற்போதும். என்னுடைய சகல சொத்தையும் உன்னிடத்தில் ஒப்பித்துப்போவேன். நீயும் உன் மனைவியும் இவற்றிற்கு யஜமானன் யஜமானிகளாய் ஆண்டு வருவீராக" என்று சொல்லி விடை பெற்றுக்கொண்டாள். பின்னர் தன் வேலைக்காரனை 'பல்தாஸார்' என்பவனை அழைத்துப் போர்ஷ்யா "நீ இக்கடிதத்தைக்கொண்டுபோய் 'பாட்யுவா' என்ற விடத்திலிருக்கும் எனது பந்துவும் 'டாக்டர்' என்றகல்வித் தேர்ச்சிப்பட்டம் பெற்றவருமாகிய 'பெல்லேறியோ' என்பவரிடத்துக்கொடுத்து, அவர் கொடுக்கும் உடையையும், சீட்டையும் வாங்கிக்கொண்டு வெனிஸ்ஸுக்குப் போகும் தோணித்துறைக்கு விரைவில் வந்துசேர். ஒரு நிமிஷமும் வீண்பொழுது போக்காதே. நான் உனக்கு முந்தியே அவ்விடம்போய்க் காத்திருப்பேன்" என்றுசொல்லி அவனை அனுப்பிவிட்டு, நெரிஸ்ஸாவைப்பார்த்து "நான் என் மனத்து ஒருபாயம் நிச்சயித்திருக்கிறேன். நமது புருஷர்களை நாம் விரைவிற்காண்போம். அவர் நம்மை அறியாதபடி ஆண்வேஷத்திற் செல்வோம். யௌவன வாலிபரைப்போல் நடிப்போம். எத்தனையோ குலமாதர்கள் நம்மேல் மோகங்கொண்டு வருந்தினார்களென்போம்; இன்னும் வாலிபருக்குள்ள எத்தனையோவிதமான சிறு பொய்களெல்லாம் சொல்வோம். அநேகவித உபாயங்கள் என் மனத்து நான் எண்ணியிருக்கிறேன்; எல்லாவற்றையும் நாம் வண்டியிற் போகும்பொழுது சொல்வேன்." என்று சொல்லி அவளையுங்கூட்டிக்கொண்டு புறப்பட்டாள்.

(இன்னும் வரும்.)

எஸ். நாராயணசாமி அய்யர், பி. ஏ.

## பச்சையப்பமுதலியார் சதாப்த பூர்த்தியும் அவர் சரித்திரமும்.

இவ்விராஜதானியில் அதிக பிரபலம்பெற்று 'புல்லும் பூமியும் கல்லுங் காவேரியுமுள்ளளவும்' தன் பேர் மறக்காதபடி தர்மஞ்செய்து புகழுடம்பெடுத்த பச்சையப்பமுதலியாருடைய தர்மங்கள் ஏற்பட்ட 50-வது வருஷ பூர்த்தி மகோற்சவம் போன வருஷம் மார்ச்சு-மீ இராஜப்பிரதிநிதி அக்கிராசனாதிபதியாகவிருக்கக் கொண்டாடப்பட்டதை யாவருமறிவார்கள். அம்மகோற்சவங் கொண்டாடியதோடு போன வருஷம் அவர் தர்மத்தில் ஏற்பட்ட கலாசாலையில் படித்த பழைய புதிய மாணாக்கர்கள் வருஷத்திற் கொருமுறை கூடி அவர் ஞாபகத்தைக்கொண்டாடத் தீர்மானித்தார்கள். அந்தப்படியே இந்த வருஷமும் அக்காலேஜ் பழைய புதிய மாணாக்கர்கள் யாவரும் நாளது மார்ச்சு-மீ 24-உ சனிக்கிழமையன்று கூட்டங்கூடி அவர் ஞாபகத்தைக்கொண்டாடினார்கள். இந்த தர்மிஷ்டர் இறந்துபோய் இந்த மாசத்தோடு சரியாக நூறு வருஷ காலமாகிறது. இத்தனைகாலமாகியும் மங்காத புகழ்பெற்ற அந்தப்புண்ணியவான் காலஞ்சென்ற சதாப்த பூர்த்தியைக்கொண்டாடக்கொடுத்து வைத்தது நமக்கு எவ்வளவு பெருமை. சென்ற 24-உ அவர் ஞாபகத்தைக்கொண்டாடக்கூடிய பொதுக்கூட்டத்தில் அவர் பிரபாவங்களை யெடுத்துரைத்து அவரால் நம்தேசத்துக்குண்டாய்வரும் நன்மைகளைக்காட்டி நம்மவர்கள் அவருதாரணத்தால் பயன்பெற்று அவர் வழியில் நடக்க நாட்டமுற்று வரவேண்டுமென்று பல பேர் பலவிதமாக வற்புறுத்திப் பேசினார்கள், அவர்களில் ராவ்பஹதூர் வ. கிஷ்ணமாசாரியார் அவர்கள் பழைய பச்சையப்பப்பையனாக முன்வந்து பேசியது அதி ரசமாக விருந்தது. அவர் விசேஷமாகவற்புறுத்தியது என்னவெனில், சத்குணசிரேஷ்டரான பச்சையப்பமுதலியார் ஞாபகத்தைக்கொண்டாடி அவர் நடத்தையையும் செய்கைகளையும்பற்றி அடிக்கடி நினைத்து அவர் ஜீவ ஒழுக்கத்தை மனதில் தியானித்து வருவதால் அவரைப்போல் நாமும் ஆக வேண்டுமென்கிற அவா ஜனிக்க அதனால் நாமும் நம

தேசத்துக்குப் பயன்படுவோராவோ மென்பதே. 'பச்சையப்பமுதலியார்' என்கிற பேர் எங்கும் பிரபலமாயினும் அவருடைய பிறப்புவளர்ப்பும் அவர் ஜீவ்ய சரித்திரமும் எல்லாருக்கும் அவ்வளவு நன்ருகத் தெரிந்திராதென்றெண்ணுகிறேம். ம-ா-ா-ஸ்ரீ கிஷ்ணமாசாரியார் சொல்லியபடி அவர் ஞாபகத்தைக்கொண்டாட அவருடைய ஜீவ்ய சரித்திரம் நன்ருகத் தெரிந்திருக்கவேண்டியது அவசியமாதலால், அம்மஹானுடைய சரித்திரச் சுருக்கத்தை 9-வருஷங்களுக்குமுன் ம-ா-ா-ஸ்ரீ கிஷ்ணமாசாரியரவர்களே திரட்டி யெழுதியபடி அவர் அனுமதியுடன் கீழே பிரசுரிக்கிறேம் :—

### பச்சையப்பமுதலியார் என்னும் தர்மிஷ்டநுடைய சரித்திரம்.*

"கல்வி, செல்வம், நாகரீகமுதலியவற்றில் மிகச் சிறப்புற்ரேங்கிய தொண்டைநாட்டிலே சித்திர விசித்திரமான மாட்மாளிகைகளும், கூடகோபுரங்களும், தேவாலயங்களும் நிறைந்து சைவ வைணவ சமயங்கள் நிலைத்து விளங்கப்பெற்ற திவ்யதேசமாகிய காஞ்சீபுரத்தில், அகமுடையார் குலத்தில் விசுவநாதமுதலியார் என்ரெருவர் இருந்தார். இவர் பாரியை "பேதைமை யென்பது மாதர்க் கணிகலம்" என்கிறபடி அறிமடமும், அடக்கமும், பொறுமையும், ஆபரணமாகக்கொண்ட பூச்சியம்மாள் என்னும் குணவதி. இவர்கள் தங்கள் வர்ணாசிரமத்துக்குத் தக்கபடி சீவனம் செய்துகொண்டிருக்கையில், இரண்டு குமாரத்திகள் உண்டானர்கள். முதல் குழந்தைக்கு சுப்பம்மாள் என்றும், இரண்டாவது புத்திரிக்கு அச்சம்மாள் என்றும் பெயர். தங்களுக்குப் புத்திரன் பிறக்க வேண்டுமென்று கடவுளைப் பிரார்த்தித்துக்கொண்டிருக்கையில், பூச்சியம்மாள் கர்ப்பவதியானள். ஆனல் குழந்தை கர்ப்பத்திலிருக்கையிலேயே பிதா இறந்துபோய்விட்டார். பின்பு புருஷதிக்கின்றி அநாதையான பூச்சியம்மாள், தன் குமாரத்திகள் இருவரையும் அழைத்துக்கொண்டு, காஞ்சீபுரத்துக்குச் சற்று வடகிழக்கில் நாற்காதனூரத்திலிருக்கிற பெரியபாளயம் போய், தங்கள் குடும்பத்தாருக்கு இஷ்டராய், ஆற்காட்டு சுபேதாருடைய காரியங்களை நிர்வகித்துவந்த ரெட்டிராயர் என்கிற மாத்துவபிராமணர் ஆதரணையில் இருக்கையில், இங்கிலீஷ் 1754-ம் வருஷத்துக்குச் சரியான பவ வருஷத்தில் ஓர் சற்புத்திரனைப் பெற்ருள்.

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்ருே னெனக்கேட்ட தாய்."

அக்குழந்தை சிவந்த உருவமும், நீண்டபுருவமும், அகன்ற கண்களுமுடையதாய், நாளொருவண்ணமும் பொழுதொருமேனியுமாய், பச்சையப்பனென்று நாமதேயம்பெற்று, அதிரூபலாவண்ணியங்களுடன் வளர்ந்துகொண்டிருந்தது.

உலகத்தில் சுகதுக்கங்கள் தனித்தனி நேரிடத்தொடங்கினல், ஒன்றின்பின்னென்றய் அடுத்தடுத்து உண்டாவது அனுபவசித்தமாகையால், பிள்ளைக்கு ஐந்துபருவ மாய்த் தெலுங்குபாஷை அப்பியசித்துக் கொண்டிருக்கையில், இவர்களுக்கு ஓர் பற்றுக்கோடாயிருந்த ரெட்டிராயர் காலஞ்சென்றுவிட்டார்.

"ஊழிற் பெருவலி யாவுள மற்ருென்று
சூழினுந் தான்முந் துறும்."

புருஷனிறந்தபிறகு ஓர் ஆதரவைப்பற்றிப் பிள்ளையை முன்னுக்குக்கொண்டுவரலாமென்று எண்ணியிருக்க, அத்துணையும் நாம் இழந்துவிடும்படியாயிற்றே; இனி நமக்குள்ள கொஞ்சம் தனத்தை விர்த்திபண்ணவும், ஆதரிக்கவும், ஒருவருமில்லையே. இவ்விளங்குழந்தைகளைக்கொண்டு நாம் எப்படிக் கரையேறுவோமென்று மனம்வெதும்பிப் பூச்சியம்மாள் துக்கசாகரத்தில் மூழ்கியிருக்கையில், அவ்வூரிலிருந்த ராமுரெட்டி பெண்சாதி வெங்கட்டம்மாளும் மற்றுமுள்ளவர்களும், சென்னப்பட்டணம்போய்ச் சேர்ந்தால் சில பெரியமனிதர்களுடைய சகாயத்தைப்பெற்று, நல்ல நிலைமைக்கு வந்துவிடலாமென்று சொன்னதைக்கேட்டு "அகதிக்கு ஆண்டவனே துணை" என்பதையெண்ணி, தன் குமாரன் பச்சையப்பனையும் மங்கைப்பருவமடைந்த இரண்டு குமாரத்திகளையும் அழைத்துக்கொண்டு, பட்டணம்போய்ச் சேர்ந்தாள். அங்கே *ஸெந்துஜார்ஜ் கோட்டைக்கு வடமேற்குமைதானத்தைச்சார்ந்த ஒற்றவாடையில், சாமிமேஸ்திரி தெருவென்று சொல்லப்படுகிற சிறிய சந்தின் வடபுற மேலண்டைக் கோடியிலோர் வீட்டிற் குடியிருந்துக்கொண்டு, தான் பெண்பிள்ளையாகையால் தன் கையிலுள்ள பணத்தை மோசம் போகாமல் விர்த்திபண்ணிக் குழந்தைகளைக்காப்பாற்றவேண்டுமேயென் றெண்ணங்கொண்டு, நல்ல கண்ணியமும், யோக்கியதையும், நம்பிக்கையும், திக்கற்றவர்களுக்கு உதவிபுரியும் பெருந்தகைமையும், உடைய பிரபுக்கள் யாரென்று விசாரிக்கையில், இவர்கள் குடியிருந்த வீட்டிற்குச் சமீபத்திலேயேயிருந்த ஒருவர், தன் யெஜமான் போனி நாராயணபிள்ளையென்பவர் சகல நற்குணங்களும் பொருந்தியவரானதால், அம்மாள் கோரிக்கையை ஈடேற்ற வல்லவரென்று சொன்னர்.

* ஜனவிநோதினியிலிருந்து எடுக்கப்பட்டது.

* Fort St. George.

போனி நாராயணபிள்ளையென்பவர், செங்கற்பட்டு ஜில்லா பொன்னேரிதாலூகா நெய்தவாயல் கிராமத்தில், யாதவகுலத்தில் பிறந்தவர். சென்னப்பட்டணத்தில் இந்தியாவின் சரக்குகளை ஐரோப்பாவில் பல இடங்களுக்கு அனுப்புவது, அவ்விடத்துச் சரக்குகளை இங்கே வரவழைப்பது முதலான வர்த்தகத்தொழில் செய்துவந்த மேஸ்தர் போனி என்பவருக்கும், அவருக்குப்பின் அவர் பாரியைக்கும், துப்பாசியாயிருந்தபடியால், இவரை இது காரணமாக போனி என்கிற அடைமொழி கொடுத்துக் கூப்பிடுகிறது வழக்கம். இவர் இங்கிலீஷ்துரைத்தனத்தாருக்குச் சிநேகிதராயிருந்ததால், சுதேசிகளநேகருக்குத் தகுந்தவேலைகள் செய்வித்துக்கொடுத்து மேம்பாடுள்ளவராயும் இருந்தார். பிறகு செங்கற்பட்டு ஜில்லாவைச்சேர்ந்த, மெதவாயலென்னுங் கிராமத்தை ஆற்காட்டு நபாபுவினிடத்தில் சுரோத்திரியமாகப்பெற்று, அந்தக் கிராமத்தின் வரும்படி அங்கே கட்டின தர்மசத்திரத்துக்கு உபயோகமாகும்படி செய்துவந்தார். இவருடைய தர்மகுணங்களையறிந்து, பூச்சியம்மாள் இவரை நேரிற்கண்டு தன்னெண்ணங்களைத் தெரிவித்தவுடன், அவரும் அந்தம்மாள் இஷ்டப்படியே செய்யச்சம்மதித்து, தனக்கு உடன்பிறந்தாள் என்னும் முறைமைகொண்டபடிக், கொடுத்த பொருளை விர்த்தியாக்கி, பச்சையப்பனுக்கு வித்தியாப்பியாசம் செய்துவந்தார்.

பெண்கள் இருவரில் மூத்தவளாகிய சுப்பம்மாள் புங்கத்தூர் தெய்வநாயகமுதலியாருக்கும், அச்சம்மாள் என்னும் பெயருள்ள இளையவள் கூடலூர் தெய்வநாயக முதலியாருக்கும், பாணிக்கிரஹணம் செய்துகொடுக்கப்பட்டு, சிலகாலம் வாழ்ந்துகொண்டிருந்தார்கள். பெரியவளுக்கு ஐயாளம்மாள் என்றொரு குமாரத்தியும், இளையவளுக்கு முத்தையன் என்றொரு குமாரனும் பிறந்தார்கள். இக்குழந்தைகள் வளர்ந்துகொண்டிருக்கையில், கொஞ்சகாலங் கடந்தபின், இப்பெண்கள் மாங்கலியத்தோடு வெகுநாள் வாழ்ந்துகொண்டிருக்கும் பாக்கியமற்றவர்களாய், தங்கள் புருஷர்களிறந்தபின் புக்ககத்தில் தக்க ஆதரணையின்றி, தங்களுக்குள்ள சொத்துக்களையும் எடுத்துக்கொண்டு, தாய்வீடுவந்து சேர்ந்தார்கள்.

பச்சையப்பன் பாலியத்திலேயே புத்திகூர்மையும், யுக்தியுமுடையவனாய், வியாபார தந்திரங்களையெல்லாம் செம்மையாய் அறிந்துகொண்டு, "முயற்சி திருவினையாக்கும்" என்பதை யுணர்ந்து, வெளிதேசத்துச் சரக்குகளை மொத்தமாய் வரவழைக்கும் பெரிய வியாபாரிகளிடத்திலிருந்து, வேண்டியவளவுக்குக் கைவிலைக்குவாங்கிவிற்கும் சிறுவியாபாரிகளிடத்தில் தரவுகாரவேலையிலமர்ந்து, சாமான்களை வாங்கவரும் ஐரோப்பியர்களுக்குச் சுதேசபாஷை தெரியாததலால், அவர்களுக்கு வேண்டியவஸ்து இன்னதென்றும், அதின் விலை முதலானவை இன்னதென்றும் இங்கிலீஷில் தெரியப்படச்சொல்லி, வேண்டியவைகளை வாங்கிக்கொடுத்து, இருதிறத்தாரும் தனித்தனி இஷ்டத்துடன் கொடுக்கும் பொருளைப் பெற்று,

> "தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
> வேளாண்மை செய்தற் பொருட்டு."

என்பதற்கேற்க இரப்போர்க்கும், வித்வான்களுக்கும், தன்னாற் கூடியவளவு பொருளுதவிசெய்து, தெய்வபக்தியுடையவனாய்ச் சந்நிதிகளில் கைங்கரியங்களுக்குச் சிறிது தனஞ் செலவழித்து, மிகுந்ததைக் குடும்பத்துக்கு உதவியாகத் தன் தாயாரிடத்தில் கொடுத்துக்கொண்டுவந்தான்.

இவ்வாறு சிலநாள் நடத்திக்கொண்டிருக்கையில், தான் செய்துவரும் தொழிலில்வருமானம் நிலையில்லாமலும், தன்மனதுக்கிசைந்தபடி தர்மச் செலவுகள் செய்யப்போதுமான திரவியம் கிடைக்கத்தகுந்ததல்லாமலும் இருப்பதையிட்டு வேறுவேலையில் பிரவேசிக்க எண்ணங்கொண்டிருக்கும்போது, ஒரு ராணுவ உத்தியோகஸ்தரான இங்கிலீஷ்துரை, இவ்விளைஞனுடைய நுட்பபுத்திக்கும், வேலைகளைத் தாழ்வின்றிச் சாக்கிரதையோடும் ஊக்கத்தோடும் செய்யும் திறமைக்கும் வியந்து, தன்னோடுவரும்படி அழைக்க, அன்புடனிசைந்து, தாய்முதலானவர்களுடன் சொன்னாற் போகவொட்டார்களென்று ஒருவர்க்குந் தெரியாமல், பட்டணத்துக்குக் காததூரத்தில் பாலவாயற் சத்திரத்துக்கருகில், ராணுவப்படைகளுடன் இருந்த அந்தத் துரையிடத்தில் வேலையிலமர்ந்தான். இதைக்கேட்டபின் தாயருக்குண்டான துக்கம் இவ்வளவென்று கூறவேண்டுமோ. "பெற்றமனம் பித்து பிள்ளைமனம் கல்" என்பது பொய்யோ?

பிறகு தாயும் தமைக்கைமாரும் நாராயணபிள்ளையவர்களும் இதைக் கேள்வியுற்று, தக்கதுணையும் கண்டித்துப் புத்திசொல்வாருமின்றிப் பிள்ளைகளைச் சிறுவயதில் மனம்போனபடி விடுவது, கூடாதகாரியமென்றும், நல்ல கூட்டுறவும் கல்விகேள்வியும் பழக்கமுமில்லாவிடில், சிறுவன் கெடுவானென்றும், "முளையில் வணங்காதது முதிர்ந்தபின் வணங்காது" என்றும், எண்ணிப் பிள்ளையவர்கள் தாமே புறப்பட்டுப்போய்த் தளகர்த்தனைக் கண்டுபேசி, அவனுடை

ய வுத்தரவின்மேல் திருப்பியழைத்துக்கொண்டுவந்தார். மகாராஜாவாயிருப்பினும், கண்டித்துப் புத்திசொல்வாரில்லாமற்போனால், கெடுப்பவரில்லாதிருந்தாலும் அழிந்துபோவானென்பது நிச்சயமாகையால், முதிர்ந்த அறிவில்லாமலும், நன்மை தீமைகளைச் செம்மையாய்ப் பகுத்தறியும் பருவம் வராமலும், எக்காரியங்களிலும் தலையிட்டுச் செய்து முடிக்க எத்தனிக்கும் மூர்த்த வாலிப தசையிலிருப்பவர்கள், பெரியோர் சார்படைந்து, அவர்கள் சொல்லும் புத்தியைக்கேட்டு நடவாவிட்டால், கெடுவாரென்பதற்குச் சந்தேகமுளதோ?

"இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பாரி லானுங் கெடும்."

பிறகு பிள்ளையவர்கள், தென்தேசத்தில் இங்கிலீஷ்காரரது அதிகாரம் நடத்திவந்த நிக்கலஸ் துரையிடத்தில், பச்சையப்பனுக்குத் துபாசிவேலை செய்வித்துக்கொடுத்தார். அவ்வேலையிலிருந்துகொண்டு, கொஞ்சம் திரவியம் சம்பாதித்து அதைத் தனக்குப் பிதாமுறையாய் எல்லாக்காரியங்களையும் செய்வித்து நல்வழியில் நடத்திக்கொண்டுவந்த பிள்ளையவர்களிடத்தில் மிகுந்த வணக்கத்தோடு கொடுத்து, அவர் கட்டளைப்படி தன்னுடைய தமக்கை குமாரத்தி ஐயாளம்மாளைக் கலியாணஞ்செய்துகொண்டு, சுகமாகவிருந்தார். அப்போது தெய்வ கைங்கர்யத்தில் விசேஷ ஆவலுடையவராகையால், காஞ்சீபுரத்தில் ஏகாம்பரேசுவரர் கோவிலில் சிவகாமியம்மை, ஸ்ரீபலிநாயகர் என்னும் இரண்டு விக்கிரகங்கள் சிரேஷ்டமான சிற்பிகளைக்கொண்டு வார்ப்பித்து, 1774-ஆ மார்ச்சு-மீ 27-உ கும்பாபிஷேகம் செய்வித்து, பங்குனி மாசம் உத்திர நக்ஷத்திரத்தில், சுவாமி திருக்கலியாணம் பிரதி வருஷமும் நடத்த அனுகூலமான மண்டபங் கட்டுவிக்கத் தீர்மானித்து, அதே தினத்தில் நல்ல முகூர்த்த காலத்தில் கடைக்கால்கோலி அத்திருப்பணியை முற்றுவித்தார்.

இவ்வாறு அப்பன் என்றழைத்தவர்களெல்லாம் ஐயா என்றழைக்கும்படி, பச்சையப்பமுதலியார் ஜகத்பிரசித்தராய்த் துபாசிவேலையை மிகுந்த சாமர்த்தியத்தோடும் கவனத்தோடும் நிர்வகித்து வருகையில், 1776-ம் வருஷத்திலும், அதற்குப் பின்னும், செங்கற்பட்டு ஜில்லாவைச்சார்ந்த பூவிருந்தவல்லி, திருப்பாசூர் முதலிய இடங்களில் இங்கிலீஷ் வர்த்தகக் கூட்டத்தாருக்கு மேல்வாரமாகக் கிடைக்கும் தானியங்களை ஏற்பாட்டின்படி பணமாய்ச் செலுத்துவதாக ஒருடன்படிக்கை செய்துகொண்டு, தர்மராயமுதலியார், புங்கத்தூர்ச் செங்கல்வராயமுதலியார் என்கிற இருவரைத் தமக்குச் சகாயமாக வைத்துக்கொண்டு, இங்கிலீஷ் வியாபாரிகளுக்கும் நபாப் துரைத்தனத்தைச் சார்ந்தவர்களுக்கும், நடுவாய் அநேக இனும், மாதச் சம்பளம் செலுத்துதல், ஒரு வருக்குப் பணம் சேர்ப்பித்தல், கடன்பத்திரங்களுக்கு வட்டிகொடுத்தல், முதலான வியாபாரங்களை இருதிறத்தாரும் மிகவும் புகழும்படி நடத்தி, விசேஷ லாபத்தை யடைந்தார்.

முதலியார்காலத்தில் தென்னிந்தியாவில் ஐரோப்பியர் இன்ன நிலைமையி லிருந்தார்களென்பதையும் அவர்களிடத்தில் துபாசிகள் நடந்துகொண்டவிதத்தையும் குறித்துக் கொஞ்சம் சொல்லாவிட்டால், துபாசிகள் சம்பாத்தியம் இன்னதென்று விளங்காது. அப்போது இங்கிலீஷ்காரர் வியாபாரக்கூட்டத்தாராய் இருந்தார்களே யொழிய, தற்காலம் இருப்பதுபோல துரைத்தனம் செய்துவந்தவர்களல்லர். ஆனால் சென்னபட்டணத்தில் தங்கள் சேனைகளை வைத்துக்கொண்டு, ஆற்காட்டு நபாபுடன் சிநேகக்கட்டுப்பாடு செய்திருந்தார்கள். அப்போது பிராஞ்சுக்காரரும் வர்த்தகஞ்செய்யும் கருத்தை நாடினவர்களாய் வந்திருந்தார்கள். இந்தியாவில் அதிபதிகளாயிருந்த ஆற்காட்டு நபாபு, ஐதர், நிஜாம், இவர்கள் ஒருவருக்கொருவர் சண்டையுஞ் சச்சரவுஞ் செய்துவந்ததைப் பார்த்திருந்தவர்கள் யாராயினும், தானாய் நேர்ந்த சமயத்தில், தங்களுக்கு நாடுகள் சுலபமாய்க் கிடைக்கத்தக்கதாயிருந்தால் விட்டுவிடுவார்களோ?

"காலங் கருதி யிருப்பர், கலங்காது
ஞாலங் கருது பவர்."

இது நல்லதருணமென்று அந்நிய தேசத்தாராகிய இங்கிலீஷ்காரரும் பிராஞ்சுக்காரரும், புகைக்கும் சுதேச அதிகாரிகளில் ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு சமயத்தில் சகாயமாயிருந்து, கொஞ்சம் கொஞ்சமாய் நாடுகளைத் தங்களுக்கு உரிமையாக்கிக்கொண்டே இருந்தார்களென்பது, இந்துதேச சரித்திரம் படித்தவர்களெல்லோருக்கும் தெரிந்த விஷயந்தானே. அந்நிய தேசத்தாருக்கெதிரில், நம்மவர்கள் கட்டுக்குலையாமல் உட்கலகம் எவ்வளவு இருப்பினும் அதை ஏறத்தாழ ஓர் முடிவுசெய்யும் திடனும், ஒருமைப்பாடு முண்டாயிருந்து, தக்கபலமுள்ளவர்களைச் சகாயமாகப்பெற்றால்,

"கொல்லையிரும்புனத்துக் குற்றியடைந்தபுல்
ஒல்காவேயாகு முழவருழுபடைக்கு."

என்பதுபோல, சத்துருவுக்கு இடம் கிடைப்பது கஷ்டசாத்தியமாகும். இவ்வாறு அரசாட்சி மாறிக்

கொண்டிருக்கையில், கிழக்கிந்தியா வர்த்தகக்கூட்டத்தாராகிய இங்கிலீஷ் கம்பெனியாரும், நபாபும் ஒன்றாயிருக்கும்போதும், வேறு பிரிந்திருக்கும்போதும், கடிதங்கள் எழுதவும், பதில் விஷயங்களைத் தெரிவிக்கவும், அனுகூலமாயும் ராச்சிய நடவடிக்கைகளில், ஒவ்வொருவருடைய அபிப்பிராயங்களையுங் கண்டறிந்த இங்கிலீஷ் உத்தியோகஸ்தர்களுக்கு உண்டாயிருந்த வருமானத்தைக் கணக்கிடக்கூடாதென்றால், அவர்களுக்கு எல்லா விஷயங்களிலும் சாதகமாயிருந்து, அவர்களுக்கு லாபங்கிடைக்கும் வேலைகளில் முக்கிய உதவியாயிருந்தவர்களான துபாசிகளின் சம்பாத்தியத்தைச் சொல்லவேண்டுமோ? ஒவ்வொரு காரியத்திலும் அளவற்ற தனம் கிடைத்துக்கொண்டிருக்கும். இந்த துபாசிகள் இங்கிலீஷ் பாஷை செம்மையாய்க் கற்றுக்கொண்டவர்களல்லர். சிலருக்கு எழுதத்தெரியும்; சிலருக்கு அதுவும் தெரியாது. ஆனால் எல்லோருக்கும் மிதமாய்ப் பேசத்தெரிந்திருந்தது. வெளியில் புறப்படும்போது பச்சைக்கல்முருகு, பெரியகடுக்கன், தோடா, மோதிரம், ரத்தினசாலை முதலான ஆபரணங்கள் பூண்டு தலையில் பாகையும், நெடுஅங்கியும், அதன்மேல் சரிகை நடுக்கட்டும் கட்டி, கையில் சிவப்புப்பட்டுத்துண்டுபிடித்துச், சால்வை போர்த்துக்கொண்டு, பல்லக்கிலாவது பெரியவண்டிகளிலாவது சவாரிசெய்துவந்தார்கள்.

பச்சையப்பமுதலியார், நாளடைவில் உயர்ந்த பேரும் புகழும்பெற்று, இங்கிலீஷ் கம்பெனியாருடைய உத்தியோகத்தில் முதன்மை பெற்றிருந்த ஜோஸப் ஸலிவன் துரையிடத்தில், பெரிய துபாசியானார். இந்தத் துரையை, நபாபு வாலாஜா என்பவர் ராச்சியதந்திர வியாபாரங்களில் பங்காளத்துக் கவர்ன்மெண்டாரிடத்தில் 1781-ஆ மார்ச்சு மீ அனுப்பி, கர்நாடகதேசத்துக்கு நபாபே அதிபதியானவர் என்றும், இது விஷயத்தில் கம்பெனியார் பிரவேசிக்கிறது தகாததென்றும், 10 பட்டாளங்களை மாத்திரம் இவர் சேவகத்தில் வைக்கவேண்டுமென்றும், அவர்களுடைய செலவைமாத்திரம் பெற்றுக்கொள்ள ஏற்பாடுசெய்யவேண்டுமென்றும், தமக்குப்பின் இளையகுமாரனுக்கு ராச்சியம் கொடுப்பிக்கவேண்டுமென்றும், ஐதரைச் செயித்தபின் ஒருபங்கு தமதுவசத்தில் விடவேண்டுமென்றும், தாம இங்கிலீஷ் கம்பெனியாருக்குக் கொடுக்கவேண்டிய கடனைத் தீர்க்கும் விஷயத்தில் கூடியசகாயம் செய்யவேண்டியதென்றும், இவற்றைக் குறித்துப் பேசிமுடிவுசெய்யக் கேட்டுக்கொண்டார். அப்படியே ஸலிவன் துரைபோய்த், தம்மாற் கூடியவரையில் நபாபுக்கு அனுகூலமான முடிவுசெய்துகொண்டும் நபாபு ஆஸ்தானத்திலிருந்து இங்கிலீஷ்காரர் பிரதிநிதியாய் வேலைபார்க்கும்படி நியமனம்பெற்றும் திரும்பினார். தஞ்சாவூர் சீமையை நபாபுக்குக் கொடுப்பிக்கத் தங்களுக்கு அதிகாரமில்லையென்று, பங்காளதுரைத்தனத்தார் சொன்னபோதிலும், கடன் விஷயத்தில் சிலருக்கு முக்கால்பங்கும், சிலருக்கு முழுப்பங்கும், கொடுக்கப் பத்திரங்கள் கொடுத்து, நபாபு தேசத்து வருமானத்தில் தீர்க்கும்படி ஒத்துக்கொண்டும், மற்ற விஷயங்களில் ஸலிவன் துரை கேட்டுக்கொண்டபடியே செய்ய ஒப்புக்கொண்டார்கள். அந்த ஏற்பாட்டில் ஐதர் யுத்தம்முடிகிறவரையில், நபாபின் குடும்பரக்ஷணைக்கு வேண்டிய தனம் கொடுத்து வருகிறதும் மற்ற தேசவருமானங்களை இங்கிலீஷ்காரர் பற்றிக்கொள்ளுகிறதுமாக, அந்த வேலையை ஸலிவன்துரை பார்த்துவருவதாகவும் இருந்தது.

இந்தப் பெரும்பதவியில் ஸலிவன்துரை திருச்சிராப்பள்ளிக்குப் போயிருக்கையில், 1783-ம் வருஷம் இங்கிலீஷ்காரர் கோயம்புத்தூரைப்பிடித்து, திப்புவின் தேசங்களில் பிரவேசிப்பதற்குத் தகுந்த உபாயங்களை ஸலிவன்துரை ஏற்பாடுசெய்து ராணுவ அதிபதிக்குச்சொல்ல, அவர்புகழ்ந்து அந்தப்படிநடத்தி, விசேஷ பலனடைந்தபோதும், மைசூர் அரசனை அடக்கித், திப்பு பிரபலித்திருக்கிறானென்று, ராஜாவுக்கும் ஜனங்களுக்கும் பயமுண்டாகும்படி தூதுகளை அனுப்பும்போதும், ராணுவ தளகர்த்தனயிருந்த கர்னல் புல்லர்டன்துரை தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, திருநெல்வேலி முதலான விடங்களில் சேனைகளை விர்த்திசெய்யப்போனகாலத்திலும், சாமக்கிரிகள் சேகரித்துக் கொடுக்கவும், சேனாபதியினிடத்தில் சனங்கள் பிரீதியாய் நடந்துகொள்ளும்படி செய்யவும், முதலியார் முதன்மையாய் நின்று, எல்லாம் சாதகமாகும்படிசெய்து மிகுந்த கீர்த்திபெற்றார்.

முதலியார் தஞ்சாவூரிலிருக்கும்போது, அவ்விடத்திய ராஜா இங்கிலீஷ்காரருக்குப் பிரதிவருஷமும் கொடுக்கவேண்டிய பணத்தை ஒரேவிதமாய்க்கொடுக்கச் சரிப்படாமல், சிலவேளை அந்தேசத்து நாணயங்களாகவும் சிலவேளை பூவராகன்களாகவும் சிலவேளை உண்டிகளாகவும் கொடுக்க நேரிட்டதினாலும், அவற்றை மாற்று வட்டத்துக்காக நூற்றுக்குப் பத்து அல்லது இருபது விழுக்காடு லாபம்தள்ளி வாங்கிக்கொண்டு, அவற்றைப் பட்டணத்துக்கு

உண்டிகளாகவும், பூவராகன்களாகவும் அனுப்பிக் கொண்டுவந்ததுமன்றி, சில சமஸ்தானபதிகளா யிருந்த பிரபுக்களுக்கும் பாளையக்காரருக்கும், வேண்டிய காரியங்களை அனுகூலஞ் செய்வித்துத் தமது பேராலும், நாராயணப்பிள்ளைபேராலும், கொடுக்கல் வாங்கல் முதலான நடவடிக்கைகளை நடத்திவந்தாலும், கிடைத்த அளவிறந்த தனத்தை தபால்மூலமாய் உண்டிகளாகவும், சில சமயங்களில் அவ்விடத்துக் கொல்லர்கள்மே லெடுப்பித்தும், நாராயணப்பிள்ளை யவர்களிடத்தில் சேரும்படி அனுப்பிக்கொண்டு, தஞ்சாவூரில் தமக்கிருந்த பெரிய மெத்தை வீட்டில் வாசமாயிருந்தார்.

தற்காலத்தில் சிலர் விசேஷ தனம் கிடைத்தபின், நல்ல கூட்டுறவின்மையாலோ, சிறுவயதில் நல்ல பழக்கமில்லாமையாலோ, படிப்பின்மையாலோ, அதிக செருக்கடைந்து தாம் முன்னிருந்த நிலைமையை மறந்து, பெரியோரை இகழ்ந்து நற்பதவிக்குத் தன்னைக் கொண்டுவந்த லோககர்த்தாவாகிய ஈசனை மறந்தும், கெட்ட நடவடிக்கைகளில் பிரவேசித்து தனமிழந்து மானமிழந்து மதிகெட்டுப்போன திசையில் எல்லார்க்கும் தீயராய், மிகவும் இழிந்த நிலைமைக்கு வந்திருப்பதை நாம் கண்டிருக்கிறோமே!

"செல்வம்வந்துற்றகாலைத் தெய்வமும் சிறிதுபேணார்,
சொல்வனவறிந்துசொல்லார், சுற்றமுந்துணையுநோக்கார்;
வெல்வதேகருமமல்லால், வெம்பகைவலிதென்றெண்ணார்,
வல்வினைவிளைவுமோரார்; மண்ணின்மேல்வாழுமாந்தர்."

முதலியாருக்குண்டாயிருந்த நற்குணங்களையும் அவருடைய பரிசுத்த மனதுக்கேற்றபடி என்றும் இறவாதபுகழுடம்பைப்பெற்று விளங்கிக்கொண்டிருப்பதையும் நமது சிறுவர்கள் கண்டுதெளிந்து, அதின் பெருமையை அறிந்து அதின்படி நடக்க முயலும்படிசெய்வது அவர்களுக்கு அளிக்கும் கல்விக்கு ஒரு ஆபரணமாகையால், அவற்றைச்சிறிது இங்கு சொல்லவேண்டியது நியாயமாகத் தோற்றுகிறது.

"முந்திரிமேற்காணி மிகுவதேற்,
கீழ்தன்னை இந்திரனு வெண்ணிவிடும்."

என்கிறபடி படித்தவர்கள் கீழ்மக்களைப்போல் கர்வங்கொண்டு பெற்றோரையும் பெரியோரையும் இகழாமல், நற்குண நற்செய்கையை யுடையவர்களாய்,

"காக்கபொருளா அடக்கத்தை
ஆக்கமதனி னூங்கில்லையு யிர்க்கு."

என்றபடி அடக்கத்தையே தாம் பயின்ற கல்விக்குச் சிறந்த ஆபரணமாகக்கொண்டு, தற்காலத்தில் வழங்கும் பரீக்ஷைகளில் தேறினபோதிலும், தாம் படித்தது ஓரணுவளவாகக்கருதி, மேலும் மேலும் வித்தி செய்ய முயலவேண்டுமென்பது, பெரியோர்களுடைய கோரிக்கை.

"முற்று முணர்ந்தவ ரில்லை முழுவதூஉங்
கற்றன மென்று களியற்க—சிற்றுளியாற்
கல்லுந்தகருந் தகரா கனங்குழாய்
கொல்லுலைக் கூடத்தி னால்."

"கல்வி கரையில, கற்பவர் நாள்சில;
மெல்ல நினைக்கிற் பிணிபல; தெள்ளிதின்,
ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகிற் றெரிந்து."

முதலியார் தன் தாயாரிடத்திலும், பிதாபோலத் தன்னைப் பாதுகாத்து முன்னுக்குக் கொண்டுவந்த நாராயணபிள்ளையிடத்திலும், மிகுந்த மரியாதையுடன் நடந்துகொள்ளுவர். பெரியோர்களையும், படிப்பிற் சிறந்தவர்களையும் கண்டால், எதிர்கொண்டு போய் அழைத்துக்கொண்டுவந்து, தக்க ஆசனத்தில் இருத்திப் பிறகு தான் உட்காருவர். அயலாருடைய வித்தியை நாடினவர். ஒருவரை வஞ்சனைசெய்தலும், பொய்சொல்லுதலும், புறங் கூறுதலும், பிறர் பொருளிச்சித்தலும், பொறாமைப்படுதலும், ஆகிய குணங்கள் தன்னை அணுகவொட்டாமற் காத்தவர். நடுநிலைமையாய்க் காரியங்களை நடத்தியவர், தனக்குக் கெடுதிசெய்தவருக்குப் பிரதி அவர் வெட்கும்படி நன்மைசெய்த குணவான்.

"இன்னா செய்தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல்."

பழிக்கும் பாவத்துக்கும் பயந்தவர்; பிறனில் விழையாதவர்; எல்லாரிடத்திலும் இன்சொல் சொல்பவர். ஏழைகளிடத்திலிரக்கமுள்ளவர். தர்மமார்க்கத்தை யநுசரித்து வரும் பொருளன்றித், தகாத வழியில் நுழைந்து, சிறிதும் ஈரமின்றித் பொருள் கவரக் கருதியவரன்று.

"நாரங்கொண்டார், நாடுகவர்ந்தார், நடையல்லா
வாரங்கொண்டார், மற்றொருவர்க்காய் மனைவாழுந்
தாரங்கொண்டார், என்றிவர் தம்மைத் தருமந்தான்
ஈருங்கண்டாய்; கண்டகருய்ந் தாரெவரையா."

எவ்வித காரியங்களிருப்பினும், தான் செய்ய வேண்டிய நித்தியகருமங்களைத் தவறாது செய்து வந்தார். தமக்கு ஒழிவு உண்டானல் சாஸ்திர சம்பிரதாயங்களைப் பெரியோர்கள் முகமாய்த் தெரிந்து கொள்வதும், கவிதாப் பிரசங்கம் கேட்பதும், சங்கீதசாஸ்திரம் விசேஷமாய்ப் பெருகி நிலைத்த இடம் தஞ்சாவூராதலால், அச்சாஸ்திரத்தின் அருமையறிந்து, சிரேஷ்ட வித்வான்களுக்குத்தகுந்த மரியாதை செய்வதுமன்றித், தானும் சிறிது அப்பியசிப்பதும், இவ்விதமாய் நல்வழியில் காலங்கழித்துவந்தார்.

"அறிமின் அறநெறி, அஞ்சுமின்கூற்றம்,
பொறுமின் பிறர்கடுஞ்சொல், போற்றுமின்வஞ்சம்,
வெறுமின் வினைதீயார்கேண்மை, எஞ்ஞான்றும்
பெறுமின் பெரியார் வாய்ச்சொல்."

முதலியாருக்கு, இதுவரையிலும் மக்கட்பேறில்லாதிருந்தபடியால், சந்ததி விர்த்தியினிமித்தம் இரண்டாவது கல்யாணம் நடத்திக்கொள்ளலாமென்கிற சாஸ்திர சம்மதப்படி, தாமப்போது வாசமாயிருந்த சோழநாட்டிலே வேதாரணியம் என்னும் திவ்ய தேசத்தில், உயர்குலத்தில் ஒரு சோழிய வேளாளனுடைய பெண் 'பழனியாய்' என்பவளை விவாகம் பண்ணிக்கொண்டார். முதல் மனையாள் உயிரோடிருக்கும்போது, அவள் கருத்துக்கு அனுகூலமானவிடம் நாடி, குலம், தனம், துணை இவற்றில் வேறுபாடின்றி இணக்கமுள்ளதாய் இரண்டாவது பாரியை கொள்ளக்கூடுமெனினும், இரண்டாவது விவாகத்துக்கு முதல் பெண்சாதி சம்மதம் கொடுப்பது கஷ்டம். ஒருவாறு ஒத்துக்கொண்டாலும், பிறகு ஒற்றுமையாய் வெகுநாள் வாழ்ந்துவருகிறதில்லையென்பது அனுபவசித்தம். இவ்வாறிருக்க, முதலியாருடைய பாரியைகள் இருவரில் ஒருத்தி குலத்திலும் மற்றொருத்தி தனத்திலும், உயர்ந்திருந்ததாகச்சொன்னால், ஒற்றுமை என்பது எவ்வாறுண்டாகும். இவர்களால் குடும்பங்களில் உண்டாகும் கஷ்டநிஷ்டூரங்களை விசேஷித்துச் சொல்ல வேண்டுமோ? இவர்களுக்குள் ஒருமைப்பாடு கொஞ்சமுமில்லாதிருந்தபடியால் தனியாயிருந்துக்கொண்டிருந்தார்கள். இளையாளுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது.

இவ்வுலகத்தில் பிறந்து வளர்ந்து, சம்சாரமாகிற நடுக்கடலில் ஆழ்ந்து, இன்பதுன்பங்களில் முழுகிக் கிளம்பி, திகைத்து மதி மயங்கும், சீவகோடிகள் உலகப்பற்றொழித்து, ஆதிமூலமான சர்வேசுவரனிடத்தில் சரணாகதி பண்ணினால், அந்த ஆன்மாக்களுக்குப் பகவான் ஓர் மரக்கலமாகிக் கரையேற்றிவிடுவதுமன்றி, அவ்வீஸ்வரகுணநுபவம் செய்வதே நித்தியாநந்தமென்றும், மற்றது நிலையில்லா இன்பமென்றும் கல்வி கேள்விகளால் செம்மையாய் அறிந்து, முதலியார் சைவசமய தீக்ஷைகள்பெற்று, நாயன்மார்களருளிச்செய்த தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு முதலானவைகளைப் பூசாகாலத்தில் பண்வரிசைக்கிரமத்துடன் ஓதுவதுமன்றி, தம்பிரான்களுடனிருந்து பெரியபுராணம், திருவிளையாடல் முதலான புராண காலக்ஷேபஞ்செய்வதும், சிவனடியார்களை சிவசொரூபமாய் நினைத்து, அவர்களைச் செம்மையாய் ஆதரிப்பதும், அறுபத்துமூன்று நாயன்மார் திருநக்ஷத்திர தினங்களில் சாம்பமூர்த்திக்கு அபிஷேகம்செய் விப்பதும், ராத்திரிகாலத்தில் பதிகங்களை யாழில் அமைத்து வாசிப்பதும், ஸ்தலங்களில் திருப்பணிகள் நிறைவேற்றுவதும், தீர்த்த ஸ்தல யாத்திரை போகுமவர்களுக்கு வேண்டிய பொருளுதவி செய்வதுமான சற்கைங்கர்யங்கள் செய்துவந்தார்.

"பிறவிப்பெருங்கடனீந்துவர், நீந்தார்
இறைவனடி சேராதார்."

இவருக்கு அப்போது சிநேகமாயிருந்தவர்களில், மதராசு பிரசிடெண்டுகளான ஆர்ச்சிபல் காம்பெல், றம்பேர்ல்ட், லார்ட்டு மகார்டினி, இவர்களுக்கு வர்த்தகம் முதலியவைகளில் துபாசியாயும், அதிக விவேகமும் ஐசுவரியமுமுள்ளவருமான யாதவகுலப்பிரபுவான வாயலூர்க் குழந்தை வீராப்பெருமாள்பிள்ளை என்பவர் அதிக அந்தரங்க இஷ்டமுள்ளவர். இவர் செங்கற்பட்டு ஜில்லா ஸ்ரீ ஹரிகோட்டையென்னும் கிராமத்தைச் சுரோத்திரியமாகப்பெற்று, அதை அநேகவழிகளில் தம்மாற் கட்டப்பட்ட தர்ம சத்திரங்களுக்கும், தேவஸ்தானங்களுக்கும், உபயோகமாகச் செய்தவர். இவர் சென்னபட்டணத்துக் கடுத்த சிந்தாத்திரிப்பேட்டையில் வசித்துக்கொண்டிருந்தபடியால், தாமும் அவர் சமீபத்தில் வாசஞ்செய்ய எண்ணங்கொண்டு, கோமளேசுவரப்புரத்தில் வீடுகட்டிக்கொண்டு, சிலகாலம் இங்கும், சிலகாலம் தஞ்சாவூரிலுமாய் வசித்துக்கொண்டிருந்தார்.

1788-வூத்தில், அமரசிங்கு மகாராஜா தஞ்சாவூர்ப்பட்டம் வகித்து, சிலநாள் சென்றபின் கவர்னர் ஆர்ச்சிபால்ட் கேமல்துரையவர்கள், பச்சையப்ப முதலியாரை வரவழைத்துத், தஞ்சாவூர் ராஜா இங்கிலீஷ்காரருக்குக் கட்டவேண்டிய திரவியம் குறித்த தவணைப்படி சேராததினால், அத்தேசத்து வருமானங்களைப் பற்றிக்கொண்டு, துரைத்தனத்தாருக்குச் சேரவேண்டிய தொகையைக் கிரமப்படி செலுத்திவர வேண்டுமென்று கேட்டுக்கொண்டதுமன்றி, ராஜாவும் அப்படியே செய்யவேண்டுமென்று முதலியாருக்கு எழுதினார். தாமே தனியாய் அந்தக்காரியம் பார்த்துவரக் கூடாமையாயிருப்பதைத் தெரிவித்ததின்மேல், உவில்லியம் பீட்டிரி துரையைப்போய் வேலைபார்த்துவரும்படி நியமித்தபோது, அவருக்கு உதவியாய் முதலியாரையும், இங்கிலீஷ்கார அதிகாரிகள் அனுப்பினார்கள். அப்போது முதலியாரிடத்தில், ராஜா லக்ஷம்வராகன் கடன்வாங்கிக் கம்பெனியாருக்குக் கட்டினார். பிறகு பணம் செலுத்துவதற்குத்தக்க சில புது ஏற்பாடுகள் செய்வித்துவிட்டு,

பீட்டிரிதுரை பட்டணம் வந்துவிட்டபின், முதலியார் அங்கிருந்துகொண்டு கொடுக்கல் வாங்கல் நடத்திவருகையில், அங்கே இருந்த சில ஐரோப்பியர்கள், 'துபாசிகளென்று பேர்கொண்ட பச்சையப்ப முதலி, சுப்பராவு, சின்னையாமுதலியார், முதலான தனிகர்கள் விசேஷ வட்டியும், லாபமும் அடைவதற்காக ராஜாவுக்கு வேண்டிய கடன்கொடுத்துக், கிராமங்களையும் நாட்டில் விளையும் தானியங்களையும், ஈடாகவைத்துக்கொண்டு சிறிது காலங்கழித்துத், தானியங்களை உயர்ந்த விலைக்கு விற்றுவருவதால், நாட்டுக்குடிகள் மிகவும் மெலிந்துபோவதற்கும், ராஜா வீண்செலவுபண்ணுவதற்கும், இடமாகிறபடியால், துபாசிகளை அப்புறப்படுத்தினால் குடிகளுக்கு க்ஷேமமுண்டாகும்' என்று, செய்துகொண்ட விண்ணப்பத்தை அநுசரித்துத், துரைத்தனத்தார் 1791-௵த்தில் மேஸ்தர் ராம், மேஸ்தர் புல்டன் துரைகளுக்குத், துபாசிகளைப் பட்டணம் அனுப்பிவிடவேண்டுமென்று, கண்டிதமாய் எழுதினார்கள். அதற்கு முதலியார் மிக வெறுப்படைந்து, பட்டணம் வந்து பீட்டிரி துரையினிடத்தில்போய்த், தான் 50,000 வராகன் வரையில் ராஜாவுக்குக் கடன்கொடுத்திருக்க, அது வராததற்குமுன் தஞ்சாவூரை விடச்சொல்லுவது நியாயமல்லவென்றும், தான் விசேஷ வட்டிவாங்கி, குடித்தனக்காரர்களை வருத்தப்படுத்தினதில்லையென்றும், சுப்பராவு, சின்னையாமுதலி முதலானவர்கள்பேரில் குடிகள் முறையிட்டதுபோல், தன்பேரில் எவரும் எப்போதும் முறையிட்டதில்லையென்றும், கவர்னர் கேமல்துரையுடைய வேண்டுகோளின்படி தஞ்சாவூருக்குப்போன என்னைத் திரும்பிவரவழைத்தது, கிரமவிரோதமென்றும், வாதித்ததின்மேல் முதலியார்மேல் யாதொரு குற்றமுமில்லையென்று ஏற்பட்டது. பிறகு தஞ்சாவூர் தமக்கு வாசயோக்கியமாயிருப்பதால், அங்கே போகவேண்டுமென்று கேட்டதற்கு இசைந்து துரைத்தனத்தார் ஆக்ஷேபணையில்லாமல் உத்தரவுகொடுக்கப்பெற்று, 1792-௵த்தில் பாரிசவாயுகண்டு நிவர்த்தியாகும்பொருட்டுத் தஞ்சாவூருக்குப் போனார்.

இதனிடையில், தஞ்சாவூரிலிருந்து பட்டணம் வந்தபின் ஜோஸப் ஸலிவன்துரை குமாரருக்குத் துபாசியாய்க், கொஞ்சகாலம் இருக்கையில், தில்லைத்திருப்பதியில் அநேக திருப்பணிகளும், கட்டளைகளும், நடத்த எத்தனிக்கையில் தீக்ஷிதர்கள் இவருக்கு இணங்காமல் கலகஞ்செய்யவே, உதாரகுணமுடையவராய் விசேஷ தர்மங்கள் நடத்திவந்த மணலி சின்னையாமுதலியார், தீக்ஷிதர்களுடன் கலந்து வார்த்தை சொல்லி, முதலியாருடைய அபிப்பிராயப்படி ஒத்து நடக்கும்படி திட்டம்பண்ண, பின், நடனசபாபதிக்குத் திருத்தேர் செய்வித்து பிரமோச்சவஞ்செய்ய ஆரம்பித்து, 1791-௵ ஜுன்-மீ 28-உ துவசாரோகணம் செய்வித்து, ஆனித்திருமஞ்சன உற்சவம் நிறைவேற்றினார்.

மறுபடி தஞ்சாவூருக்குப் போகையில், முதலியார் போனி நாராயணப்பிள்ளை குமாரராயும், சத்தியவாதியுமான ஐயாப்பிள்ளையை ஸலிவன்துரை குமாரருக்குத் துபாசியாக இருக்கும்படி ஏற்படுத்திப்போனார். போனவிடத்தில், மேஸ்தர் ஸட்ரேஞ்சுதுரைக்குப் பிரியமுள்ளவராய் இருந்து, இரண்டுவருஷங்கழித்து வாயு உபத்திரவம் கொஞ்சம் லகுவாய்த், தன் வேலைகளை முன்போலவே பார்த்துவருகையில், மதுமேகரோகமும், பேதியுங்கண்டு சரீரம் மெலிந்து, மூலைமூல உபாதியும் உண்டானதினால், தகுந்த சிகிச்சை செய்து கொள்வதற்காகக் கும்பகோணத்துக்குப் போய், அங்கே பிரமாதீச-௵ மாசி-மீ 29-உக்குச்சரியான, இங்கிலீஷ் 1794-௵ மார்ச்சு-மீ 9-உ சேர்ந்து, இதற்குமுன்னே கட்டிவைத்துப் பிராமணர்களுக்குத் தானம்பண்ணின அக்கிரஹாரத்துக்குச் சமீபத்தில், தாம்கட்டத் தொடங்கியிருந்த சத்திரத்துவேலையை நடப்பித்துக்கொண்டிருக்கையில், தேகம் இனி நில்லாதென்று கண்டு, உலகப்பற்று ஒழிந்து சீரானுபவத்தில் வெறுப்புற்று,

"நாய் நமதென நரிநம தெனப்பிதா
தாய் நமதென நமன்றன தெனப்பிணி
பேய் நமதென மனமதிக்கும் பெற்றிபோ
லாய் நமதெனப்படும் யாக்கையாரதே.

விடம்பயி லெயிற்றரவுரியும் வீநறை
குடம்பையுந் தானெனுங் கொள்கைத்தே கொலா
நடம்பயில் கூத்தரினடிக்கு மைவர்வா
ழுடம்பையும் யானென வுரைக்கற்பாலதோ.

நடுத்தயா விலார்தமை நலியத்துன்பநோ
யடுத்தயா வருந்திருவட்டிய யாக்கையைக்
கொடுத்தயா வறம்புகழ் கொள்வனேயெனி
னெடுத்தயாக் கையின்பயனிதனின் யாவதே."

என்று யாக்கை நிலையாமைகண்டு, தெளிந்து நல்லறிவு முதிர்ச்சியடைந்து, சிவலோகத்தைத் தியானஞ்செய்து, தன்னுடைய சொத்து எல்லாவற்றையும் பகவத்கைங்கர்யத்திற்கும், கச்சித் திருப்பதி முதல் இராமேசுவரம்வரையிலுமுள்ள, சைவவைஷ்ணவஸ்தலங்களில் என்றும் அழிவில்லாமல் தர்மகட்டளைகள் நடக்கவேண்டுமென்கிற நல்லமனதுடன் ஈசுவரார்ப்பிதஞ்செய்து, 1794-௵ மார்ச்சு-மீ

22உ மரணசாசனம் எழுதிவைத்து, 24உ கும்பகோணத்திலிருந்து கடைசியாகத், தன் கையினலேயே நாராயணப்பிள்ளைக்குக் கடிதம் எழுதி அனுப்பினர். அந்தக் கடிதத்தில், முதலியார் தமக்கு நிர்யாணகாலம் சமீபித்திருப்பதையும், பிறர் சொத்தில் அணுவளவும் தப்பாமல் திருப்பிவிடவேண்டுமென்கிற திடமான மனதுடன் கணக்கு, ரொக்கம் முதலான விஷயங்களை வரையறைசெய்தும் தெரிவித்தார். பிறகு தஞ்சாவூருக்கு வடமேற்கே கொஞ்சதூரத்தில் காவேரிக்கரையில், காசியிற்றுல்லியமாய் சிவகணங்கள் கொண்டாடும் பஞ்சநத க்ஷேத்திரமென்னும் திருவையாற்றில், மானிடதேகத்தை ஒழித்து, சாம்பவமூர்த்தியின் பாதாரவிந்தம் அடையவேண்டுமென்னும் உட்கருத்துடன் போய்ச்சேர்ந்து, பிரமாதீச஖ு பங்குனிமீ 21உ திங்கட்கிழமை அமாவாசைதிதிக்குச் சரியான, இங்கிலீஷ் 1794஖ு மார்ச்சுமீ 31உ பரலோகப்பிராப்தியானர்."

"தோன்றிற் புகழொடு தோன்றுக ; வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று."



## ஆபத்துக்கிடமான அபவாதம்

### அல்லது

## கமலாம்பாள் சரித்திரம்.

### XIV.

அதற்குள்ளாக சுவாமி எழுந்தருளுவதற்குக் காலம் சமீபித்துவிட்டபடியால் 'சரி, இங்கேதான் யாராவது எடுத்துக்கொண்டுபோயிருப்பார்கள் வேறு எங்கே போகப்போகிறன் நான் கோயிலுக்குப் போகிறேன் தேங்காய் பழம் வெற்றிலை பாக்கு எல்லாம் எடுத்துவை' என்று கமலாம்பாளுக்கு உத்திரவு கொடுத்துவிட்டு முத்துஸ்வாமியய்யர் கோயிலுக்குப்போய் விட்டார். அன்று ஆருத்திரா தரிசனமானபடியால் தெருவெல்லாம் சித்திரக்கோலங்களால் நிரம்பியிருந்தது. வீடுகளெல்லாம் மாவிலைத் தோரணங்களால் அலங்கரிக்கப் பட்டிருந்தன. ஒவ்வொரு ஸ்திரீயும் தான்தான் ரதியென்று பாவனைபண்ணிக்கொண்டு உல்லாச நடை நடந்தாள். புருஷர்களெல்லாம் ஸ்நானஞ்செய்து பட்டுடுத்து விபூதி யணிந்து மன்மதாகாரமாயிருந்தார்கள். ஆய்விட்டது, சுவாமி எழுந்தருளுகிற சமயம். மேளக்கார முத்துக்கருப்பன் பம் பம் என்று கோஷம்செய்து தன்னிரு கன்னங்களும் வீங்கத் தனது அபசுரக்களஞ்சியத்தை வெகு தாராளமாய்த் தெரு நிறைய வீசத்துவக்கினன். தவுல்காரச் சின்னண்ணன் அங்கு இருப்பவர்களுடைய காதையும் மத்தளத்தின் தோலையும் ஒரேயடியாக சல்லடைக்கண் மயமாய்த் தொளைக்க ஆரம்பித்தான். தாளக்காரச் செம்பகம் இவர்களிரண்டுபேரையும் லட்சியம் செய்யாது, இருக்கிறவர்கள் தேவையானல் ஈவு வைத்துக்கொள்ளட்டும் என்று உத்தேசம் செய்து பத்து நிமிஷம் இடைவிடாமல் கதறக்கதற அடிக்கிறதும் மறுபடி பத்து நிமிஷம் கையைக்கட்டிக் கொண்டு சும்மா இருக்கிறதுமாய்க் காலம் கடத்தினன். இவர்கள் போதாதென்று தாசி பூரணசந்திரோதயமும் கூடப்புறப்பட்டுவிட்டாள். அவள் அழகு வெகு அற்புதம் ; கறுப்பாயிருந்தாலும் சந்திரன் சந்திரன்தானே. மேலும் அவள் நடக்கிறதே நாட்டியமாக இருக்கும். பட்டிக்காட்டு சுவாமிக்குரிய இவ்வித பரிவாரத்துடன் ஏகாம்பரநாதர் உலாவுக்கு எழுந்தருளினர். செவ்வந்திப் பூமாலைகளால் சிங்காரிக்கப்பட்ட விமானத்தின்மீது இரண்டு பக்கமும் இரண்டுபேர் சாமரை வீச நாகசுரக்கோஷ்டி முன்னேசெல்ல பாகவதக்கோஷ்டி பின்னேவர மான் மழுவேந்திய கையும் கங்கைதங்கிய சடையும் மதிவதிந்த மௌலியும் கடுவமர்கண்டமும் உமையமர் உருவமும் நெற்றியிற் றிகழ்ந்த வொற்றை நாட்டமும் எடுத்த பாதமுந் தடுத்த செங்கையும் புள்ளியாடையும் ஒள்ளிதின் விளங்க, எளியார்க்கெளியனுயுள்ள சாக்ஷாத் கைலாசபதியே பிரத்தியக்ஷமாய்வந்து பாவத்தை வென்று மோக்ஷத்தைப்பெற்ற ஆத்மாவின் உண்மை நிலையையுணர்த்தும் உருவகார்த்தனத்தைப் புரிந்தாற்போற் றோன்ற அந்தக்கரையில்லாக் காட்சியைக்கண்ட அவ்வூரார் அனைவரும் ஆனந்தவாரியில் மூழ்கி மெய்மறந்து புளகாங்கிதது ஆடிப்பாடி ஓடியுலாவி சம்போ சங்கரா தயாநிதே என்று போற்றித் துதித்து ஆனந்தத் தாண்டவம் செய்தார்கள். பாண்டவர் வனவாசகாலத்து பகவான் கிருஷ்ணன் உண்ண தூர்வாசாதி முனிவர்களெல்லாம் பசியாறியதுபோல் சிவபெருமானது ஆனந்தத்தையே தங்களது சொந்தமாய்ப் பாராட்டிக் களித்தபக்தர் கணத்தின் நிர்மலக்குதூகலத்தை முத்துஸ்வாமியய்யரும் கமலாம்பாளும் மெய்மறந்து அனுபவித்தார்கள். ஆயினும் தங்களருகில் அந்த சமயத்தில் குழந்தையைக்காணுததில் அவர்களுக்கு உண்டான வருத்தத்துக்களவில்லை. தங்களகத்து நடராஜனுக்கு கோயில் நடராஜனைக்காட்டி அவனது சிறிய அழகிய நிஷ்களங்கமான கண்களின் மூலமாக அந்த திவ்விய காட்சியைக்கண்டு களிக்க பாக்கியம் இல்லாமல் போனதைப் பற்றி அவர்களுக்கு நிரம்ப வருத்தம். முத்துஸ்வாமியய்யர் சுவா

மியைப்பார்க்கிறார்; கமலாம்பாள் இடுப்பைப்பார்க்கிறார்; குழந்தை லெட்சுமியைப்பார்க்கிறார். கமலாம்பாள் கண்களில் நீர் ததும்புகிறது. முத்துஸ்வாமியய்யர் ஏறிட்டுப் பார்த்தார்: அவருக்கும் துக்கம் வர வெளியில் ததும்பி வந்த கண்ணீரை உள்ளே இழுத்துக்கொண்டார். குழந்தை லெட்சுமி சுவாமியைப்பார்க்க நிமிர்ந்தவுடன் அவளை ஆவலுடன் கவனித்துக்கொண்டிருந்த ஸ்ரீநிவாசனுடைய கண்கள் அவளுடைய கண்களைச்சந்திக்கஇருவரும்பின்வாங்கிவிட்டார்கள். உடனே லெட்சுமி அம்மாளைப்பார்த்து 'அம்பியைக்காணோமே யம்மா' என்று சொல்லி நிமிர்வே கமலாம்பாளுக்கு அடக்க முடியாமல் கண்ணீர் பெருகிற்று. லெட்சுமியும் தாரைதாரையாய் நீர் பெருக்கினாள். சுவாமி கோயிலுக்குப்போனவுடனே குழந்தையைப்பற்றி அங்கும் விசாரிக்கத்தலைப்பட்டார்கள். வீட்டுக்கு வீடு ஆள்விட்டுத்தேடினார்கள். சிறுகுளத்தில் மந்தைக்கு சமீபத்தில் ஓரமாக சில வீடுகள் உண்டு. அந்த வீடுகளுக்கெல்லாம் கடைசியாய் உள்ள வீடு முத்துஸ்வாமியய்யருடைய தங்கை சீதாலட்சுமி அம்மாள் வீடு. அந்த வீட்டுக்கு குழந்தை நடராஜனை யாரோ எடுத்துச்சென்றதாக சமாசாரம் வெளியாயிற்று. அதைப்பற்றிப் பின்னும் விசாரணை செய்ததில் நடராஜனை காலை 7 மணிக்குமுன் அனேகர் நான் பார்த்தேன் நான் பார்த்தேன் என்று வந்தார்கள். அதுவுமன்றி மேற்சொல்லிய வீட்டுத்திண்ணையில் சிலகுட்டிகள் சேர்ந்து புளியம்விரை யாடிக்கொண்டிருந்ததாகவும் அவ்விடத்தில் ஒரு குட்டி நடராஜனை எடுத்துப் போயிருந்ததாகவும் தெரியவந்தது. முத்துஸ்வாமியய்யர் முதலானவர்கள் இவ்விதம் விசாரித்துக்கொண்டிருக்கும்போதே சுப்பராய அய்யர் என்ற ஒருவர் 'ஐயோ என் பெண் மீனாட்சியையும் காணோமே' என்று அலறிக்கொண்டுவந்தார். சீதாலட்சுமி அம்மாள் வீட்டுத் திண்ணையில் விளையாடிக்கொண்டிருந்த பெண்களுடன் மீனாட்சியும் இருந்ததாகத் தெரிந்தது. நடராஜனையும் அவளையும் காணாததால், அவனை அவள்தான் எடுத்துக்கொண்டு போயிருக்கவேண்டுமென்று அங்குள்ளவர்கள் ஊஹித்தார்கள். ஆனால் அவள் எங்கே எடுத்துக்கொண்டு போயிருக்கக்கூடுமென்று தெரியவில்லை. அவ்வூர் முழுவதும் குடித்தெருவு கடைத்தெருவு அக்கிரஹாரம் ஒன்று பாக்கிவிடாமல் எங்கும் தேடிப்பார்த்தார்கள். எங்கும் காணாமையால் நாலா பக்கமும் ஆள்விட்டு ஊருக்கு வெளியே பார்த்துவரும்படி அனுப்பினார்கள். ஊருக்கு மேற்கே போனவர்கள் இரண்டு மைல் போனவுடன் ஒரு சிறு பெண் அழுத ஓசைகேட்டது. உடனே அவர்கள் அந்த சப்தம்வந்த இடத்தை நோக்கிச் செல்கையில் ஒருபுதரின் மத்தியில் கால் கைகளில் எல்லாம் முட்காயம்பட்டு 'ஐயையோ அம்மா அப்பா' என்றழுதுகொண்டிருந்த ஒரு பெண் குழந்தையைக் கண்டார்கள். அவள்தான் மீனாட்சி. அவர்களைக் கண்டவுடன் அவள் ஓடிவந்து அவர்களைக் கட்டிக்கொண்டு அழுதாள். கேட்ட கேள்விக்கொன்றும் பதில் சொல்லக்கூடாமல் விம்மி விம்மி யழுத அவளை அவர்கள் எடுத்துக்கொண்டு சமாதானம்பண்ணி தெளியச்செய்து ஊருக்குக்கொண்டுவந்தார்கள். அவள் சோர்ந்து அவர்கள் கையிலேயே நித்திரைபோய்விட்டாள். வீட்டுக்கு வந்தவுடன் அவளுக்குக் குளுமோர் காய்ச்சிக்கொடுக்க அதை வாங்கி சாப்பிட்டுவிட்டு அவள் அப்படியே நித்திரைபோய்விட்டாள். அவள் எப்பொழுது எழுந்திருக்கப்போகிறாள் என்று முத்துஸ்வாமியய்யர் முதலிய எல்லோரும் ஆவலுடன் காத்திருந்தார்கள். பகல் இரண்டு மணிக்கு அவள் சோர்வு தெளிந்து எழுந்திருந்தவுடன் 'குழந்தை நடராஜனை நீ கண்டாயா அம்மா' என்று அவளைக்கேட்க அவள் சீதாலட்சுமி அம்மாளுடைய கிரஹத்தில் நடராஜனை எடுத்து விளையாடிக்கொண்டிருந்ததாகவும், யாரோ ஒரு சூத்திரச்சி அவளை இங்கே வா என்று ஆசைகாட்டி யழைத்ததாகவும், அவள் நடராஜனையும் எடுத்துக்கொண்டு கூடவே போனதாகவும், இப்படி நெடுந்தூரம் மதிமயங்கி கூடவேபோக ஒருகாட்டுக்குப் பின்னால் யாரோ சில சூத்திரச்சிகள் பயங்கரமான கோரரூபத்துடன் அவளிடம்வந்து நடராஜனைப் பிடுங்கிக் குதிரையின்மேல் வைத்துக்கொண்டு ஓடியேபோய் விட்டதாகவும், தன்னைக்கூட்டிப்போன சூத்திரச்சியும் அவர்களுடனேயே ஓடிவிட்டதாகவும் தேம்பித்தேம்பி யழுதுகொண்டு சொன்னாள். பிறகு அவள் வழி தெரியாமல் தவித்து நெஞ்சும் மாரும் படபட என்று அடிக்க பயந்து அலறிக்கொண்டு கொஞ்சதூரம் ஓடுவதும் பிறகு பயமிஞ்சி கண்ணை மூடிக்கொண்டு அழுதுகொண்டு நிற்பதுமாகக் கடைசியில் வீட்டுக்குக் கொண்டுவரப்பட்ட சமாசாரம் வரைசொல்லி முடிக்க அதைக்கேட்டவர்கள் எல்லாரும் அவளை 'இந்தமட்டிலேயாவது வந்து சேர்ந்தாயே அம்மா' என்று தட்டிக்கொடுத்துத் தேற்றினார்கள். பிறகு திருடர்கள் குழந்தையைத் தூக்கிக்கொண்டு எந்தத்திசை நோக்கிப்போனார்கள் என்று விசாரித்துக்கொண்டு எல்லாருமாக குழந்தைப்பறி நடந்த இடத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். சப்மாஜிஸ்திரேட்டு வைத்தியநாதய்யரும் அவர்களுடன் கூடச் சென்றார். எல்லாருமாக அந்த இடத்திற்குப்போய்ப் பார்க்கும்பொழுது அங்கே இரண்டு மூன்று குதிரைகள் காலடியும் நாலு வித்தியாசமான மனிதர்களு

டைய காலடியும் தென்பட்டன. வைத்தியநாதய்யர் அந்தமனிதர்களுடைய காலடிகளை செவ்வையாய் அளக்கச்செய்து குறித்துக்கொண்டார். பிறகு அந்த அடிகளைத் தொடர்ந்து செல்ல அவை ஒருகாட்டுக் காளிகோயிலில் கொண்டுவிட்டன. அந்த பத்ரகாளியம்மன் கோயில் இரண்டு மலைகளுக்கு மத்தியில் இருந்தது. அந்த அம்மன் சந்நிதியில் பத்துப் பதினைந்து மரங்கள் நெருங்கி வளர்ந்திருந்தன. அவற்றின் மத்தியில் குதிரைக்குளம்பு அடையாளங்கள் போயிருந்தமையால் எல்லாரும் அங்கே போனார்கள். போகவே ஒருகோரமான தோற்றம் அவர்கள் கண்ணுக்குத் தென்பட்டது. அதென்னவெனில் மூன்று கற்கள்வைத்து ஒருஅடுப்பும் அதனருகில் ஒருகுழந்தையின் எலும்புகளும் காணப்பட்டன. தரையில் ரத்தம் சிந்தியிருந்தது, அதைக்கண்டவுடன் முத்துஸ்வாமியய்யர் ஐயையோ, 'நடராஜன்,' 'கொலை, பாவி' யென்று கூக்குரலிட்டார். அங்கே கிடந்த எலும்புகள் குழந்தை நடராஜனுடைய எலும்புகளாயிருக்கலாமென்று அவர்களுக்குப்பட்டது. அந்த அடுப்பில் சமீபத்தில் நெருப்பு மூட்டப்பட்டிருந்ததாகவும் நினைக்க இடமிருந்தது. உடனே அந்தக்குரூரமான துர்க்காதேவிக்கு நரபலி கொடுப்பதற்காக குழந்தையைக் கொன்றிருப்பதாக எல்லாரும் ஊஹித்தார்கள். குழந்தையை எடுத்துப்போனவர்கள் கள்ளர்களாயிருந்திருக்கும் பட்சத்தில் மீனாட்சி கழுத்திலிருந்த நகைகளை அவர்கள் அபகரித்திருப்பார்கள். ஒருவேளை பேயாண்டித்தேவன் சிறைச்சாலையிலிருந்து வெளிப்பட்டு குழந்தையைத் திருடிக்கொண்டுபோயிருக்கலாமென்றாலோ அவன் குழந்தையைக்கொன்று பலியிட்டிருக்கமாட்டான். நரபலி கொடுப்பது அவர்களுக்குள் வழக்கமில்லை. வேறு யார் இந்தக் கொடூரமான அக்கிரமத்தைச் செய்திருப்பார்கள் என்று தெரியவில்லை. முத்துஸ்வாமியய்யர் மூர்ச்சை போட்டு விழுந்துவிட்டார். அவரைத்தூக்கி வண்டியில் போட்டுக்கொண்டு எல்லாருமாய் ஊருக்குத் திரும்பினார்கள். கமலாம்பாள் முதலானவர்கள் சமைத்ததை மூடிவைத்துவிட்டு குழந்தையைத் தேடிப்போனவர்களுடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டு வெகு துக்கரமாய் உட்கார்ந்திருந்தார்கள். பத்திரகாளிகோயிலில் நடந்த விபரீத விர்த்தாந்தத்தைக் கேட்டகாலத்தில் அவர்கள் அடைந்த துயரத்தை என்னென்று சொல்லுவேன். கமலாம்பாள் அலறியடித்துக்கொண்டு மூர்ச்சித்து விழுந்தாள். லெட்சுமி கோவென்று கதறியழுதாள். முத்துஸ்வாமியய்யர் புலம்புவதும் அழுவதுமாய் இருந்தார். வைத்தியநாதய்யரும் அவர்களுடன் சிறிதுநேரம் துக்கித்துப் பிறகு 'அங்கே கிடக்கும் எலும்புகள் உங்களுடைய குழந்தையினுடையதா யிருக்கவேண்டுமென்பது என்ன. உங்களுக்கு அவ்வளவு கொடிய விரோதி—யாரிருக்கிறார்கள். அப்படியே விரோதிகள் இருந்தாலும் நரபலியிடத்தக்கவர்கள் இங்கு—யாரிருக்கிறார்கள்' என்று பலவிதமாக ஆட்சேபனைகள்செய்து அவர்களைத் தேற்றினார். 'பலியிடப்பட்ட குழந்தை வேறாயிருந்தால் நடராஜனைத் திருடிப்போனவர்களுடைய குதிரைகள் அந்தக்காளி யம்மன் கோயிலுக்குப்போயிருக்கக் காரணமென்ன' என்று முத்துஸ்வாமியய்யர் கேட்க வைத்தியநாதய்யர் ஒருவேளை அந்தத் திருடர்கள் நம்முடைய குழந்தை கொல்லப்பட்டதாக நாம் எண்ணும்படி வேறு எந்தக் குழந்தையினுடைய எலும்புகளையாவது அங்கே கொண்டுவந்து போட்டுப்போயிருக்கலாம் என்றார். முத்துஸ்வாமியய்யர், 'ஏது எனக்குத்தோன்றவில்லை' என்றுசொல்லவே வைத்தியநாதய்யர் ஆருடக்காரனை வரவழைத்துக் கேட்போம் என்றுசொல்லி அவ்வூர் வள்ளுவனுக்குச்சொல்லியனுப்பினார். அவன் உடுக்கையெடுத்துக்கொண்டு விரைவில் ஓடிவந்து தூபதீப நைவேத்தியங்கள் எல்லாம்செய்து உடுக்கையடித்து அவ்வூரிலிருக்கும் ஒரு மந்திரவாதிதான் நரபலிசெய்தது என்று முடித்தான். உடனே அந்த மந்திரவாதிக்கு ஆள்விட்டார்கள். அவர் அவ்வூரைவிட்டு அன்று காலமேதான் போய்விட்டார் என்று சங்கதி தெரியவந்தது. உடனே அவர்தான் அந்தக் கொலைக்குக் கர்த்தா வென்று அங்குள்ளவர்கள் அனுமானித்தார்கள். உண்மையில் அங்கிருந்த வள்ளுவனுக்கும் அந்த மந்திரவாதிக்கும் விரோதம். அந்த மந்திரவாதியினுடைய தொழிலைக் கெடுப்பதற்கு இதுதான் நல்ல சமயமென்று அந்த வள்ளுவன் அவன்மேலே குற்றத்தைப்போட்டான்.

(இன்னும் வரும்.)

பி. ஆர். சிவசுப்பிரமணிய அய்யர், பி. ஏ.

---

# ஒருதாத்தா செய்த தீர்மானம்

அல்லது

# தங்கம்மாள் தலைவிதி.

## VIII.

"இதென்ன கஷ்ட காலம். கையினால் எவ்வளவு நாள் பொங்கிச் சாப்பிடுகிறது. அடுப்பூதி இருக்கிற கண்ணும் அவிந்துபோகிறது. கழுதை ஜன்மமெடுத்த ஸ்திரீகளுக்கே சமையல்வேலை தகும். நமக்கெல்

லாம் சரிப்படாது; எனக்கு மேலும் சக்தியில்லை. ஆஸ்தி முழுவதும் செலவு செய்தாவது கலியாணஞ் செய்து போடவேண்டியதுதான். ஆனிமாசமோ பிறந்துவிட்டது. அந்த அயோக்கியன் சிவராம சாஸ்திரிக்கு நான் பலதடவை சொல்லியனுப்பிவித்தும் அவன் எட்டிப்பார்க்கவில்லை. வைதிகர்கள் காசு அகப்படுவதாயிருந்தால், காக்கைகளைப்போல வந்து கூடுகிறார்கள். மூத்தாள் இருக்கும்பொழுது எவனாவது எனக்குத் தெரியாமல் அவளிடத்தில், பிச்சை முட்டி என்று பிடுங்கித்தின்ன வந்துகொண்டிருப்பான். அவள் இறந்த பிறகு ஒரு பயல்களையும் காணோம். அப்புக்குட்டியும் வருகிறதை நிறுத்திப் போட்டான். என்பேரில் என்னகோபமோ தெரியவில்லை. பணம்கொடுத்த சமயத்துக்கு உதவிசெய்யவில்லையென்றோ? இல்லாவிட்டால் அவன் புத்தியைக் கேட்காமல் கலியாணஞ் செய்யப்போகிறேனென்றோ. கண்ட பேர்வழிகளிடத்திலெல்லாம் சொல்லியனுப்பிவிக்க இஷ்டமில்லை. அந்த 'ஹல்கா' சிவராமனைவிட்டாலும் வேறுகதியில்லை. கோவில், குளங்களுக்குப்போனால் அவனைப்பார்க்கலாம். இடுப்புப் பிடிப்பு ஓர்பக்சத்தில் உபத்திரவம். எழுந்திருந்து உட்காரக் கஷ்டமாயிருக்கிறது. இன்றைய தினம் இராத்திரி பிராணனைக் கையில்பிடித்துக் கொண்டாவது அவன் வீட்டுக்குப்போய்க் காணவேண்டியதுதான். வேறே மார்க்கத்தைக்காணோம்" —என்று தீர்மானித்து, சூரியாஸ்தமனமானவுடன், விளக்கேற்றி, நீரில்போட்டிருந்த அன்னத்தை 'பிரமராக்ஷஸை'ப்போல் தனியே புசித்தவிட்டு, கதவைப்பூட்டிக்கொண்டு சாஸ்திரியார் வீட்டை நோக்கித் தாத்தா புறப்பட்டார்.

ஆகாயமானது, விசுவரூபியாகி சர்வலோகங்களிலும் வியாபித்து ரட்சிக்கும் மகாவிஷ்ணுவினுடைய கரியதிருமேனிபோல்வும்; நட்சத்திரங்கள், அத்திருமேனியில் பிரகாசிக்கும் வச்சிர வைடூரியங்களைப் போலவும், சிற்றின்பத்தில் மூழ்கி விஷயம் தெரியாமல் வாயினாற் பிதற்றி வாதிக்கும் வம்பர்கள் சபையில், கற்றடங்கி, மௌனமாய் தூரத்தினின்று கவனித்திருக்கும் சாதுக்கள்போலவும் விளங்கின. சாமி அய்யர் அண்ணாந்துபார்த்தார்; ஆனால் ஆகாயத்தின் அழகை அனுபவிப்பதற்கன்று; நாழிகை என்னவிருக்குமென்று தெரிந்துகொள்ளவேண்டி; அதுவும் முடியவில்லை. கண்மங்கலடைந் திருந்தபடியால் எந்த நட்சத்திரம் உச்சமென்று தெளிவாய்த்தெரியவில்லை. "நடக்கவோ சக்தியில்லை, கண்ணோ தெரியவில்லை, இந்த அபரகாலத்தில் கலியாணம் செய்வது மகாபாவம்" என்ற ஞானம், பிராமணவடிவங்கொண்ட இந்த பாதகனுக்கு மனதில் உதிக்கவில்லை. கைத்தீவட்டி கொண்டு இருட்டுவழி நடப்பவனுக்கு, எட்டிவருகிற மனுஷன் தெரியுமா; வெகுதூரத்தில் ஆகாயத்தில் ஜனிக்கும் நட்சத்திரங்கள்தான் தெரியுமா. காமக்குரோதாதிகளைக் கைக்கொண்டு பாபமார்க்கத்தில் நடக்கும் இந்த சாமி அய்யருக்கு, முன்னே நிற்கின்ற யமனும் புலப்படவில்லை, மறுலோகத்தில் புண்ணியாத்மாக்கள் அனுபவிக்கும் மோட்ச சுகங்களும் தோன்றவில்லை. வெறுங்கண்ணுக்குத் தெரியாமல், அனேக நட்சத்திரங்கள் ஆகாயத்தில் இருப்பதும், ஒவ்வொரு நட்சத்திரமும் ஓர் சூரியனாகி, நவக்கிரகங்கள் சூரியனைச்சுற்றுவதுபோல, அவைகளையும் கிரகங்கள் சுற்றுகிறதும், மகா தூரத்தில் இருப்பதினால் அவைகள் சிறிதாய்த்தோன்றுவதும், உரகத்தை விட்டு, தூரதிருஷ்டிக் கண்ணாடியைக்கொண்டு ஆகாயத்தைச்சோதிக்கும் வானசாஸ்திரியல்லவோ அறிவான். குடித்து மயங்கிக் குப்பைத்தொட்டியின் பக்கத்திற் புரளுங் குடியனறிவானா. பிரமசிருஷ்டியின் சிறப்பும், சிருஷ்டியில் நிறைந்திருக்கும் ஆத்மகோடிகளின் சுவரூபமும், மனதுக்கெட்டாத நித்தியானந்த நிலைமையும், ஞான திருஷ்டியாகிய கண்ணாடியைக் கொண்டு பார்ப்பவர்களுக்கல்லவோ புலப்படும். சிற்றின்ப மயக்கத்தில் உழலும் சாமி அய்யரின் உள்ளத்து எவ்வாறு புகும்.

தாத்தா தன் காரியமே நினைவாக, தன்னை ஒருவரும் பார்க்காதபடி முட்டாக்குப் போட்டுக்கொண்டு, மெல்ல மெல்ல ஏகி, சாஸ்திரியார் வீட்டின் வாயில் படிக்கட்டைத் தடவிக்கடந்து நிலையண்டை வந்தார். கதவு மூடப்பட்டிருந்தது. கூப்பிட்டால் அக்கம்பக்கம் தெரிந்துவிடுமென்று யோஜித்து, யாராகிலும் கதவைத்திறந்து வெளியேவந்தால் கேட்போமென்று திண்ணையில் உட்கார்ந்தார். ஆனால் இருப்புக்கொள்ளவில்லை. 'வீட்டினுள் எல்லாருந் தூங்கிவிட்டார்களோ, விழித்திருக்கிறார்களோ, விழித்திருந்தால் பேச்சுக்குரல் கேட்குமே' என்று எழுந்து பூட்டின் வாயில் காதை வைத்து கவனித்துக்கேட்டார். குழந்தையைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டும் குரல்கேட்டது. "நல்லவேளை, தெய்வாதீனம்" என்று, மெதுவாய்க்கதவைத் தட்டினார். சிவராம சாஸ்திரியார் மனைவி சானகியம்மாள் கதவுதட்டுகிற சப்தங்கேட்டு, தொட்டிலாட்டத்தையும், பாட்டையும் நிறுத்திக் கவனித்தாள். தட்டின சப்தம் மறுபடியும் கேட்கவில்லை. பக்கத்து வீட்டில் கதவை இடித்தார்களோ, இல்லாவிடின்

மனப்பேயோ என்று, மறுபடியும் தொட்டிலாட்டினாள். சானகி அம்மாளுக்கு இரட்டைநாடி சரீரம், சந்தோஷத்தினால் ஏகாண்டமாய்ப் பெருத்துத்தடித்து, கட்டைக் குட்டையாய் இருந்தாள். வைதீகன் மனைவியாய் இருந்தாலும், நல்ல ஓர் ஜோடிப்பு நகை பூண்டிருந்தாள். காதில் நல்ல நீரோட்டமுள்ள சிவப்பு ஓலை, முருகு, வாளி, கழுத்தில் 'டீகாப்'பதக்கத்துடன் கூடிய சரடு, காசுமாலை, இரட்டைமணி, ஆறுகொத்துச் சரடு, கையில் கெட்டிக்காப்பு, தோடா, முதலியவும் ஐந்து வராகனுக்குக் குறையாத சேலையும் தரித்திருந்தாள். அவள் பிறந்தவீடு பணக்காரவீடு. நாலுபிள்ளைகளுக்கு நடுவில் இவள் ஒரே பெண். நல்ல வேதவித்தான குலத்தில் பெண்ணைக் கொடுத்தால், கோடி "யஞ்ஞ" பலனுண்டென்று சாஸ்திரமிருப்பதினால், இவள் தகப்பனார் இவளை வைதீகனுக்கு ஸ்ரீதனத்துடன் கன்னிகாதானம் செய்துகொடுத்தார். பிறந்த வீட்டிலிருந்து வேண்டியபடி சாமான்கள் வருஷாந்தரச் சாப்பாட்டுக்கு வந்துவிடும். புருஷனும் வியாபகமான 'உபாத்தியாயமுடையவரானபடியினால்,' வேஷ்டி, புடைவை, பாத்திரம், அரிசி, தேங்காய், பாக்கு, வெற்றிலை, பழம், கையாள்கள் கட்டும் கப்பம், சுபாசுப சம்பாவனை இவைகள், சர்க்கார் கிஸ்தியைவிட அதிக சுலபமாய் வசூலாகிச் சேர்ந்துகொண்டுவந்தன. மேலும் வேதிக்காமலே மண்ணையும் விற்றுப்பொன்னுக்கும்சக்தி வைதீகர்கள் எல்லோருக்குமுண்டு. விருந்திட்டு வீண்போனவர்களையும், கொடுத்துக் குடியழிந்தவர்களையும், தினமும் பார்ப்பதினால் அந்த அக்கிரமங்களுக்கு ஏற்படுகிறதில்லை. இவர்கள் சம்பாத்தியமெல்லாம் தர்ம வழியாய்க் கிடைக்கிறபடியினாலே, பணம் ஒன்றுக்கு மூன்றாய்க் குட்டிபோடுகிறது. பக்தர்களுடைய குடும்ப பாரத்தை பகவானே வகிக்கிறார் என்று 'கீதை' வாக்கியமிருப்பதினாலே, அந்த அம்மாளுக்கு செல்வப்பெருக்கம், மகவுப்பெருக்கம், ஆனந்தப்பெருக்கம் எல்லாமுண்டாயிருந்தது. உல்லாசமாய்ப் பாடிக்கொண்டு தொட்டிலாட்டும்பொழுது, மறுபடியும் கதவைத்தட்டும் சப்தங்கேட்டது. குழந்தையும் தூங்கிவிட்டபடியால் தொட்டிலை மெள்ள விட்டு, கதவண்டை வந்து, "யாரங்கே" என்று கேட்டாள்.

சாமி. அ.—"நான் தான், கதவைத்திறவுங்கள்."

சானு.—'நான் தான்' என்றால் எனக்குத் தெரியவில்லை. பேரைச்சொல்லுமே.

சாமி. அ.—சிவராமசாஸ்திரியார் இருக்கிறாரா.

சானு.—என்னத்துக்குக் கேட்கிறீர்கள்.

சாமி. அ.—வேணும், அகத்தியம் ஓர்காரியமாக அவரிடத்தில் வந்தேன்.

சானு.—படுத்துக்கொண்டுவிட்டாப்போலிருக்கிறது.

சாமி. அ.—எழுப்பியாவது நான் வந்திருக்கிறேனென்று சொல்லுங்கள்.

சானு.—மத்தியானமெல்லாம் வெயிலில் அலைந்து, தலையை வலிக்கிறதென்று அயர்ந்து தூங்கும் பொழுது எப்படி எழுப்புகிறது. காரியத்தைச் சொன்னால் காலமே சொல்லுகிறேன்.

சாமி. அ.—வேறொருவரிடத்தில் சொல்லச் சரிப்படாது, அவரிடத்திலேதான் சொல்லவேணும்.

சானகியம்மாள் உள்ளேவந்து, படுக்கையின் பக்கத்தில் நின்று, தொட்டு அசக்கி 'யாரோ இரண்டு நாழிகையாகக் கதவை இடிக்கிறார்; உங்களைப் பார்க்க வேணுமாம்: எழுந்திருங்கள், சற்றே எழுந்திருங்கள்' என்று தன் பர்த்தாவை எழுப்பினாள்.

சிவ. சா.—"எவண்டி, இத்தனை நாழிகைக்குமேல் உபத்திரவப்படுத்துகிறான். ஊரிலில்லை என்று சொல்லிப்போடு."

சானு.—இருக்கிறதாக்ச் சொல்லிப்போட்டேனே.

சிவ. சா.—காலமே வரச்சொல்லு.

சானு.—சொன்னேன், உங்களுட்னே பேசிவிட்டுப் போகவேணுமென்று மறியல் கிடக்கிறார்.

சிவ. சா.—"யாரடி அவன், சண்டி."

சானு.—பேரைக்கேட்டேன். "நான் தான்" என்று சொல்லுகிறாரே ஒழிய, பேர்சொல்லமாட்டாராம்.

சிவ. சா.—இதென்ன இழவாயிருக்கிறது. விளக்கைக்கொண்டுபோய்க் கதவைத்திறந்து உள்ளே வரச்சொல்லு, நான் எழுந்திருந்து போகமாட்டேன்.

சானகி அம்மாள் கதவைத்திறந்து பார்த்து யாரோ விருத்தரென்று கண்டு, அச்சந்தெளிந்து, "மெள்ள வாருங்கள்" என்று மொழிந்து, வெளிச்சங்காட்டி, தாழ்வாரத்தில் படுத்திருந்த கணவனிடத்தில் கொண்டுவந்துவிட்டு, தீபத்தை அவர்கள் பக்கத்தில் வைத்து சற்றுத் தயங்கினாள்.

சிவராம சாஸ்திரி சாமி அய்யரென்று அறிந்தவுடன், வாரிச்சுருட்டிக்கொண்டு எழுந்திருந்து

'யாரடி அங்கே, ரத்தின கம்பளியைக் கொண்டுவா. குத்துவிளக்கை ஏற்றிவை" என்றார். "சாதாரண மனுஷியனென்று நினைத்துப் பேசிவிட்டேனே, யாரோ பெரிய மனுஷியர் போலிருக்கிறதே; இதென்ன வெட்கக்கேடு" என்று சானகி அம்மாள் வருத்தமுற்று, விளக்கையும் ரத்ன கம்பளியையும் கொண்டுவரப் போனாள்.

சிவ. சா.—என்னவிசேஷம்; தாங்கள் பெரியமனுஷாள், ஒருநாளும் ஓரிடத்துக்கும் போசாதவர்கள் இராத்திரியிலே இவ்வளவு நாழிகைக்கு மேலே, தனியே, அடியேன் ஏழை வைதீகன் வீட்டுக்கு வந்தது?

சாமி. அ.—உம்மைப் பார்க்கத்தான் வந்தேன்.

சிவ. சா.—அதற்குத் தாங்கள் வருவானேன். யாரிடத்திலாகிலும் சொல்லி யனுப்பிவிக்கக்கூடாதா. நாயின் கழுத்தில் ஓலை எழுதிக் கட்டிவிட்டாலும் போதுமே; வந்துவிடுவேனே.

சாமி. அ.—அப்புக்குட்டியினிடத்தில் சொல்லியனுப்பினேன். உம்மிடத்தில் சொன்னானோ இல்லையோ.

சிவ. சா.—மொத்தமாய் தாங்கள் விஜாரித்ததாகச் சொன்னான். வரவேணுமென்று தினமும் நினைத்துக்கொண்டிருக்கிறேன். தரிசனம் பண்ண சரிப்படவில்லை. கலியாணநாள்: இரண்டுகாசு வரும்படியானகாலம். ஓய்வில்லாத தொந்திரவாயிருக்கிறது. அகத்தியமான காரியமென்று தெரிந்திருந்தால், எந்தவேலையிருந்தாலும், எவ்வளவு வரும்படி போனாலும், விட்டுவிட்டு வந்திருப்பேன்.

சா. அ.—நாழிகையாகிறது, உமக்கும் தூக்கங் கெடுகிறது: ரகஸியமாய் ஓர் ஆலோசனை கேட்கவந்தேன். அந்தக்காரியம் உம்மாலே தான் முடியும். உம்மைத் தான் நம்பியிருக்கிறேன்.

சிவ. சா.—என்னாலே ஆனதை சித்தமாய்ச் செய்கிறேன்; தாங்கள் வேறு, நான் வேறு என்ற எண்ணம் எனக்குக்கிடையாது.

சா. அ.—இன்னம் யாராகிலும் அகத்தில் இருக்கிறார்களோ.

சிவ. சா.—ஒருத்தருமில்லை, சமுசாரங்கூட உள்ளே போய்விட்டாள்.

சா. அ.—சரி; என் யோகட்சேமசமாசாரம், சமீபத்தில் எனக்கு நேரிட்ட கஷ்டம் எல்லாம் உமக்குத்தெரியுமே.

சிவ. சா.—நான் உங்காத்துக்கு வந்து இரண்டு வருஷமாய்விட்டது. சமீபத்தில் எனக்கு ஒன்றுந் தெரியமாட்டாது. நான் எங்கே வம்புக்குப் போகிறேன். என்னை யார் கூப்பிடுகிறார்கள்.

சா. அ.—எனக்கு சமுசாரம் தப்பி இன்றைக்கு அறுபது நாளாகிவிட்டது. வீட்டில் ஒருத்தி இல்லாமல் நான் சோற்றுக்குப்படுகிற துன்பம் கணக்கு வழக்கில்லை. யாரையாகிலும் உதவியாகக்கொண்டு காலந் தள்ள நாலாவிதத்திலும் யோஜித்துப் பார்த்தேன். ஒன்றும் எனக்கு சரிப்படவில்லை. கலியாணம் செய்துகொண்டால் தான் பிழைப்பேன்.

சிவ. சா.—விவாகம் செய்துகொள்ளத் தீர்மானித்திருக்கிறீர்களே, கால்ஸ்திதி, தேகஸ்திதி, மனோதைரியம், எல்லாவற்றையும் கொண்டு யோஜித்தீர்களா.

சா. அ.—தேகஸ்திதியும், காலஸ்திதியும் எப்போதும் போலத்தான் இருக்கு. தைரியத்துக்கு ஒன்றுங் குறைவில்லை.

சிவ. சா.—இரண்டுபேர்கள் வேண்டிய சினேகிதர்கள், தம்பி, குமாரன் இவர்களுடன் கலந்து ஆலோசித்தீர்களா.

சா. அ.—என்வருத்தமறிந்த சினேகிதனேது. கேட்டால் வேண்டாமென்றுதான் சொல்லுவார்கள். பிள்ளையையும், தம்பியையும் கேட்கவேண்டியதில்லை. ஆஸ்தி செலவாகி அழிந்துபோய் விடுமென்று சம்மதிக்கவே மாட்டார்கள். ஒருத்தருக்கும் தெரியாமல் நடத்திப்போடவேண்டும்.

சிவ. சா.—நான் ஏதோ காசுக்கு ஆசைப்பட்டுக்கொண்டு தங்களைத் தூண்டிவிட்டு கலியாணஞ் செய்துகொள்ளச் சொன்னதாக ஊரில் பழி சொல்லுவார்கள். எனக்கு விவாகத்தில் ஏற்பட இஷ்டமில்லை.

சா. அ.—எனக்கு சுயபுத்தியில்லையா. எப்போவாகிலும் யாரையாகிலும் கேட்டு ஒன்று முன்பின் செய்ததுண்டா. பைத்தியக்காரனைத்தவிர மற்றைப்பேர்கள் உம்மேல் பழி சொல்லமாட்டார்கள்.

சிவ. சா.—அதற்குக்கூட நான் பயப்படவில்லை. இஷ்டப்பட்டவன் வேண்டியதைச் சொல்லட்டும்,

கையில் நாலாட்களிருக்கிறார்கள். எவனேயாகிலும் முன்னுக்கு வைத்துக்கொண்டு, பின்னுலிருந்து காரியத்தை நடத்தச் சக்தியுண்டு. ஆனால் வேறுகாரணம் ஒன்றிருக்கிறது. அதைத் தங்களிடத்தில் நிரூபில் சொல்ல சங்கோசமாயிருக்கிறது.

சா. அ.—சொல்லும், பாதகமில்லை.

சிவ. சா.—நான் வெகுநாளாய் உங்கள் மனுஷனாய் உங்களை யடுத்திருந்தேன். என்னைக் கைவிட்டுவிட்டீர்கள். அதற்குக் காரணம் பராபரியாய்க் காதில்பட்டது. தங்களுடைய முதல் சமுசாரம் மகாபதிவிருதை, தர்மசீலை, நெருப்புத்துண்டம்; அந்த அம்மாள் 'பெய் என்றால் மழை பெய்யும்' அவளைக்கூட வீண்செலவு செய்துபோடுகிறாளென்றும், அடங்கியிருக்கவில்லை என்றும் ஹிம்சை செய்தீர்கள். தங்கள் கடிசல்தனத்திற்கு முதலாவது, கலியாணமாவதே சிரமம். அப்படி தப்பித்தவறி ஆனாலும், பெண்ணையும் சுகமாக வைக்கமாட்டீர்கள், தாங்களும் சுகப்படமாட்டீர்கள்.

சா. அ.—பழைய கட்டெல்லாம் என் அவிழ்க்கிறீர். போனது போகட்டும். கடிசல்தனம் பண்ணிக் காசுசேர்த்து இந்த கதிக்கு வந்தேனே. இனிமேல் காசுலட்சியம் செய்கிறதில்லை. எனக்குபயோகமில்லாத பணம் என்னத்திற்கிப்போ.

சிவ. சா.—அவ்வளவு தூரத்திற்கு மனதைத் திட்டப்படுத்திக்கொண்டுவிட்டீர்களோ? இல்லை, வேடிக்கை பண்ணுகிறீர்களோ?

சாமி. அ.—வயிறெரியும் சமயத்தில், எனக்கு வேடிக்கை என்னவந்தது.

சிவ. சா.—கலியாணத்துக்கு எவ்வளவு திட்டம் போட்டிருக்கிறீர்கள்.

சாமி. அ.—ரூபாய் எண்ணூறு வரையில் போக சித்தமாக விருக்கிறேன்.

சிவ. சா.—அதற்குள்ளேயே முடித்துக்கொடுத்தால் எனக்கு என்ன பிரயோஜனம் செய்வீர்கள்.

சாமி. அ.—ரூபாய் ஐந்நூறு தருகிறேன்.

சிவ. சா.—பேச்சு உறுதிதானே.

சாமி. அ.—'சத்———க,' நிச்சயம்.

சிவ. சா.—கலியாணம் ஆய்விட்டது என்றே நினைத்துக்கொள்ளுங்கள். இந்த வார்த்தைகளெல்லாம் நமக்குள்ளேயே இருக்கட்டும்.

சாமி. அ.—நான்போய் வருகிறேன். நாளைக்குத் தங்களைப் பார்க்கலாமல்லவா.

சிவ. சா.—அடியே, தாம்பூலங் கொண்டுவா.

சா. அ.—தாம்பூலம் மெல்லப் பெற்றுக்கொள்ளுகிறேன்.

சிவ. சா.—தயவு இருக்கவேணும். வெளிச்சம் வந்திருக்கிறதோ. இல்லாவிட்டால் நான் வீடு வரையிலும் ராந்தல் கொண்டுவரட்டுமோ.

சா. அ.—அதெல்லாம் வேண்டாம், தடிக்கொம்பு ஒன்று மாத்திரம் கொடுத்தால் போதும். வழியில் நாய் பயமில்லாமலிருக்கும். போய்வருகிறேன்.——

"வயிற்றை ஒடுக்கி, ஊரைவஞ்சித்துச் சேர்த்த பணத்துக்குச் சனியன் பிடித்தது. இந்தப்பழிகாரன் கையில் அகப்பட்டுக்கொண்டேன். மனதில் காரம் நிரம்ப இருக்கிறது; அதை எல்லாம் வைத்துக்கொண்டு பணத்தைக் கறந்து விடுவான். போனது போகட்டும், கலியாணம் எப்படியாவது ஆனால் போதும்" என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டு சாமி அய்யர் திரும்பி வீடுபோய்ச் சேர்ந்தார்.

(இன்னும் வரும்.)

ஆர். சக்கிரவர்த்தி அய்யங்கார், பி. ஏ.

## மனது என்றால் என்ன?

மனிததேகத்தின் சுரூபத்தைப் பார்த்தால் தலைக்குக் கீழ்ப்பட்ட அங்கங்கள் இத்தன்மையானவென்றும், இத்தொழிலையுடையவென்றும் கண்களுக்கு இலகுவாய்ப் புலப்படுகின்றன. தலையோ அப்படி அறியக்கூடியதாகவில்லை. அது எத்தன்மையானது? மனிதன் செய்யும் வேலையில் எதற்கு ஆதாரமாகிறது? நாம் சாப்பிடும் ஆகார முதலியவைகள் அப்பாகத்திற்குச் செல்லுகின்றனவா? அது எத்தொழிலை எவ்விதமாய்ச் செய்கின்றது? இவைகளை ஒருவாறு விசாரிப்போம்.

பசியென்றால் மனிதன் வயிற்றைப்பிடித்துக் காட்டுவான்; கண்பார்வை நன்றாகத் தெரியாவிட்டால் கண்ணைத் துடைத்துக்கொள்வான்; தூரத்தில் வாசிக்கும் நாகசுரம் காதில் படாவிட்டால் தொன்னைபோல் காதைச்செய்துகொள்வான். குதிரைச்சேனை

சனை எதிர்பார்ப்பவர்கள் காதைத் தரையில்வைத்து அவ்வோசை அறிந்துகொள்வார்கள். அந்த மரத்தண்டை உளுந்து வறுக்கும் வாசனை அடிக்கிறதென்றால் மூக்கால் அதிக காற்றை உட்கொண்டு முகர்கிறோம். இவை இவ்வாறாகவிருக்க, தலையைப்பற்றி என்னகாரியம் அறிகிறோம். பரீட்சாசாலையில், கேட்ட கேள்விக்கு உத்திரம் உடனே தெரியாவிட்டால் பையன் தலையைச் சொரிகிறான். மணி அடிக்கப்போகிறதென்றால், பரபரப்பாய் ஆள்காட்டி விரலால் பின்னம் தலையை, வைத்துப்பூட்டியிருப்பதை சாவியால் திறந்து எடுப்பவன்போல், சொறிவான். அப்படியும் வராதுபோகுமானால் ஐயோ என்று தலையைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்திருப்பதை பரீட்சைசாலையில் காணாதவர் யார்? ஞாபகம், யோஜனை வேண்டிய காலத்தில் தலையைத் தொடுவதால் அது அவைகளுக்கு உபயோகமாயிருக்குமென்று சங்கிக்க இடமுண்டாகிறது. அது உண்மையிலும் அவ்வாறே. மனதென்று சொல்வதற்கு இருப்பிடம் தலைதான். ஆனாலும், சத்தியமாய்ச் சொல்லென்றும், மனச்சாட்சிக்கு உண்மையாய்ச் சொல்லென்றும் ஜனங்கள் ஹிருதயத்தில் கைவைக்கச் சொல்லுகிறார்கள். இன்னும் சிலர் நெஞ்சறியச் சொல்லென்பார்கள். நெஞ்சிலும், இருதயத்திலும் படபடவென்று அடிப்பது பிரசித்தமானதால் ஆத்துமாவின் இருப்பிடமென தீர்மானித்தார்கள்போலும். அன்றியும் இவ்விடங்களில் குற்றமுள்ளவர்களுக்கு பயத்தால் அதிகமாய் படபடவென்று அடித்துக்கொள்வது வழக்கம். இப்படி அடிப்பது சாதாரணமாயிருந்தும் மனதிற்கவலையுண்டாகும் காலங்களில் ரத்தம் அதிகமாய் ஓடுவதால் பலமுறை இந்த ஓசைகள்கேட்கலாம். தலைதான் புத்திக்கு இருப்பிடமென்று ரூபிக்க சில பரீட்சைகள் சொல்வோம். மூட்டை தூக்கி வந்தால் அப்பாவென்று முதுகைபிடித்துகொள்ளுகிறான். கொல்லை கொத்தினால் புஜத்துக்கு உபசாரம் செய்கிறான். வெகுநேரம் ஒருவிஷயத்தைப் பற்றி யோஜித்தால், அல்லது பிரசங்கித்தால் உபாத்தியாயர் தலையைப்பிடித்துக்கொள்ளுகிறார். அதிகப்படிப்புள்ளோருக்கு தலைநோவு சகஜமாய் பின்தொடரும்.

2. அன்றியும் ஓர் தவளையின் தலையைக் கிள்ளி எறிந்துவிட்டாலும், அது ஜீவித்திருக்கும். காலைச் சுட்டால் பின்னிழுத்துக்கொள்ளும். அனுவேனும் புத்திவேண்டிய வியாபாரத்திற்கு ஏலாது.

3. மேலும் அற்பப் புழு முதல் பார்த்துவந்தால் புத்தி விருத்தியடைய யடைய தலைப் பாகம் வெளிப் பார்வைக்கும், அதிக மேல்தரத்தில் உள்ளின் கனத்திலும் அதிகரித்தே வருகின்றன.

4. வயது ஆக ஆக ஞாபகக் குறைவு உண்டாவது எல்லாருக்குந் தெரியும். முதலாவது ஓர் பாஷையின் வார்த்தைகள் மறந்துவிடும். ஆளைக்கண்டால் ஞாபகம் வரக்கூடியவர்கள் பேர் மறந்து போய்விடும். பின்னும் கிழத்தனத்தில் பேசும் திறமையே குறைந்துவிடும். இந்த அவஸ்தையுள்ளோர் மண்டையினுள் சில குறித்த பாகங்கள் மலினமாய்ப் போயிருப்பதைக் கண்டிருக்கிறார்கள்.

5. மற்றுமின்னொரு வாஸ்தவ சரித்திரம் இதை நன்றாய் விளக்கும் என்று நம்புகிறோம். ஜெர்மானியா தேசத்தில் முன் நடந்த சண்டையில் ஒரு சிப்பாய் தலையில் குண்டுபட்டு மூர்ச்சைவிட்டுக் கிடந்தான். வைத்தியம் செய்யக் காயம் ஆறி எழுந்திருந்தான். எழுந்து தான் இன்னதேசத்திலிருக்கிறனென்றாவது, தன் ஜாதி, குலம், கோத்திரம், பெயராவது தெரியாதவனாய், தன் பெண்டாட்டி பிள்ளையை எல்லாம் மறந்து தாயின் வயிற்றிலிருந்து இந்த க்ஷணத்தில் விழுந்த குழந்தைபோல் பேசத்தெரியாமல், ஒருவரையும் அறியாமல், பேதையாய்விட்டான். நம்தேசத்தில் இம்மாதிரி அதிசயங்கள் நடந்திருக்கின்றன. குண்டுபட்டல்ல; மகாரிஷியின் சாபவலிமையால் தனக்கு நடந்ததை முற்றும் மறந்திருக்கக் கேள்வியுற்றிருக்கிறோம்.

இப்படியிருக்க, தேகவலிமைக்கு யாதும் குறைவில்லாததினால், வயிற்றுப்பசி அவனுக்கு முண்டாகையால், அமெரிக்காதேசம் புறப்பட்டுச்சென்று அங்கு ஜீவனம் செய்துகொண்டு வந்தான்.

அப்படி வருநாளில் முன் குண்டு பட்ட இடத்தில் இன்னொரு முறை வாசற்படி இடிக்க இராமபாதத்தினால் இடிபட்ட கல் பெண்ணாய் எழுந்ததுபோல், பேதையாய் நின்று தன் உறவினர், தான் பேசிய பாஷை முதலியபாவையும் இழந்திருந்த இம்மூப்படைந்த பாலகன் பின்னும் திடீரென்று, தன் அருமைத் தாய்தகப்பனையும், தன்னை மணந்த மனைவியும், தான்பிறந்த நாட்டையும், தன் வீட்டையும் நினைந்து கதறினான்; ஊர் வந்து அவர்களையும் அடைந்தான். இதென்ன ஆச்சரியம்!! துர்வாச மகாரிஷியின் கோபத்தினால் துஷ்யந்தனுக்கு நேர்ந்த மறதியும், நாராயண பாதத்தின் பிரசாதத்தினால் அகலியைக்கு விளைந்த விமோசனமும், ஒரு

ச்டக் குண்டும் விவேகமற்ற வாசற்படியும் செய்து முடித்தன பாருங்கள். இதுவும் கருணாநிதியான கடவுளின் செயலே. அந்த கபாலத்தின் கீழுள்ள அறையில் அல்லவோ நம் புத்தி, நாம் அறிந்த ஞானம், இனி அறியும் சக்தி எல்லாவற்றையும் நீதியாய் வைத்திருக்கிறார். அதை மாற்றி இடம் பேரச் செய்தால் அவைகளிலுள்ளவை மறைந்துபோய்விடும். தன் ஸ்திதியையடைவே பின்பெறும். சிலரின் பைத்தியம்கூட திரவம் கொடுத்து மண்டையோட்டை எடுத்து மூளையைச் சுத்திசெய்தால் போகிறது. இவ்வேலையை எப்படிச் செய்கிறது?

நம் தேகத்திலுள்ள இரத்தத்தில் 5-ல் ஒரு பங்கு 8-ல் ஒரு சாணுள்ள தலைக்குப்போகிறது. இதினால், புத்தி வேலைக்கு அதிக ஆகாரம் தேவையென அறியலாம். உலகத்திலும் பேனா வேலைக்கு மண்வெட்டி வேலையைவிட எத்தனையோ அதிகச் சம்பளம் கொடுக்கிறார்கள்.

மண்டையிலுள்ள பதார்த்தம் சாம்பல் நிறமுள்ளதாயும், வெண்மையாயும் பஞ்சுபோன்ற மிருதுவான தன்மையுடையது. அது இரண்டு கோளமாய்ப் பிரிவுபடும். இவ்விரண்டு பெரிய பிரிவுகளன்றி இன்னும் வெகுவாய் பிரிவு அடைந்திருக்கின்றது. பொடாஷ் என்ற வஸ்துவின் விகாரம்தான் அதனுள் அடங்கி யிருக்கிறது. ஆகையால் அந்த வஸ்து மிகுதியாயுள்ள காய் கறிகளை உண்பது புத்திக்குப் பலமென்பார்கள். வெண்டைக்காயை இதுகாரணம் பற்றியே ஓர் ஐரோப்பிய சாஸ்திரி ஏராளமாய் உப்பிட்டுச் சாப்பிடுவாராம். இதென்ன இவ்வளவு சாதாரணமான வஸ்து இந்தஅற்புதத்தை விளைவிக்குமா என்றால் வைரமென்று வழங்குவதும், அடுப்பு நிலக்கரியும், ஒரே வஸ்துவென்று ரூபிக்சலாம். அடுப்பில் போட்டால் அவற்றின் உறவு வெளியாகும். இரண்டும் பிடிகரியாகும்.

ஒன்று அடுப்பில் தவிப்பானேன். மற்றொன்று ராஜாதிராஜர்கள் முடிமேல் நட்சத்திரங்கள்போல் விளங்குவானேன்?

இத்தன்மையான மூளைக்கும் தேகத்தினுருபுகளுக்கும் என்ன சம்பந்தம்?

அது சொல்லுமுன் இக்கபாலமே நம்முதுகெலும்பின் பரப்பென அறியலாம். நாகத்தின் நுனியில் பரந்து இருக்கிறது. இரண்டு கோளங்கள் முதலில்; அதன்கீழ் ஒரு சிறு மூளை; அதின்கீழ், முதுகு நரம்பின் சிகரத்தில் ஒரு சதுர நரம்பு என் இவ்வாறு முக்கியமாய் மூன்று பாகங்களாகச் சொல்லலாம். இவைமூன்றும் தலையிலுள்ள மூன்று தந்தி ஆபிசு எனக்கொள்ளலாம். இவைகளுக்கு வரும் தந்திக்கம்பிகளாவன. தேகம்தோறும் ஆபாதமஸ்தகம் பாதாதிகேசம் அல்லது காலடி முதல் தலை நுனி வரை எங்கும் ஓடும் நரம்புகள்தான். இந்நரம்புகள் வெகு நுட்பமானவை. இவை கடைசியில் முதுகு எலும்போடு சென்று மண்டையின் கீழ்பாகத்தில் சதுர நரம்பில் சேருகின்றன. கைவிரல்களின் நுனியில் ஒரு சிறு ஊசியால் குத்தினால் உடனே நரம்பின் வழியாய் அது செல்ல அதை வலி என்று அறிந்து அதை நிவர்த்திக்கும்படி விரலை நகர்த்தும்படி மற்றொரு நரம்பு சமாசாரம் கொண்டுவரும். முதுகிலடிக்கும் அடியும், கண்ணில் விழும் ஜோதிரலைகளும் காதில் கொள்ளும் சப்த அலைகளும், உள்ளே ஒரு புத்தியில்லாத வரையில், அடி யுண்டாக்காது, ஜோதிரலைகள் வெளுப்பு சிகப்பு எனப் புலப்படாது. கொல்லன் என்ன அடி அடிக்கினும் சப்தமாகத் தெரியாது. ஹெகில் (Hegel) என்னும் மகாவித்துவான் லெப்ஸிக் (Leipzic) என்ற ஊரில், நெபோலியனென்ற கலியுக ராவணனோடு ஐரோப்பிய நாட்டார் சண்டைபோட்டுக்கொண்டிருக்கையில், இந்திரஜித்தைவிட எவ்வளவோ கோரமாய் கர்ஜிக்கும் பீரங்கிகள் ஆகாயத்தைத் தகைக்க, அவையொன்றும் அறியாதவராய் அதனண்டையில் மகாகிரந்தத்தை எழுதிக்கொண்டிருந்தார். அதினால் மன துக்வனிக்காவிடின் பீரங்கி வெடிஅவருக்குசப்தமாகத்தெரியாது. வேறொன்றை நினைத்துக்கொண்டிருந்தால் எதிரில் வருபவரை அறியார். தன் பெண்டாட்டி இறந்தாளெனக்கேட்ட ஒரு வேதாந்தி அவளிடத்தில் என்னசெய்யலாமென்றுகேட்பேனென்று பிணமிருந்த அரையினுள் சென்றாராம். ஆகையால் காது கேட்பதென்பதும் கண் பார்க்கிறதென்பதும் உபசாரவார்த்தைதான். மனம் அல்லது ஆத்மாவே பார்க்கிறது, கேட்கிறது என்று சொல்வதே சரி. ஆனாலும் இந் நரம்பை தூக்கத்தில் குத்தினாலும் எழுந்துவிடுவானேன். சிலசமயங்களில் வலிதெரியாவிட்டாலும் காலை யெடுத்துவிடுவோம். அது ஏனென்றால் இந்த நரம்புதலையிலிருக்கும் சுரூபத்தைபரியும் சக்தியுள்ள கோளங்களுக்குச் செல்லாது முதுகு நரம்புக்கு வந்ததும் பதில் தந்திபோய்விடும். முதுகு நரம்பு தாழ்ந்த ஆபீசு; அதற்கு மேலானது சதுர நரம்பு; அதற்கு மேலானது சிறு மூளை. இவ்விரண்டும் அதிககஷ்டமான வேலைகளுக்கு ஆதாரமாயிருக்கின்றன......................................

........................................................

........................................................

இப்படி தந்திக் கம்பிகள் மூலமாய்ச் சமாசாரம் வருகிறதென்று சொன்னோம். அது எவ்விதமாய் வருகிறது, எவ்வளவு வேகமாய் வருகிறது? ஒன்றின் மேலொன்றாய் சாய்ந்து இருக்கும் கல்லுகளில் ஒன்றை தட்டினால் மற்ற கற்கள் நகராமலே கடைசிக் கல் வரை கீழே விழுந்துவிடும். அம்மாதிரியே நரம்புகள் மூலமாக சமாசாரம் வருகிறது. வெளியிலிருந்து மூளை ஸ்தானத்துக்கு சமாசாரம் கொண்டுபோகும் நரம்புகளுக்கு 'Sensory nerves' என்று மூளை ஸ்தானத்திலிருந்து உடலின் மற்ற இடங்களுக்கு சமாசாரம் கொண்டுபோகும் நரம்புகளுக்கு 'Motor nerves' என்று இங்கிலீஷில் பேர்வைத்திருக்கிறார்கள். நமக்கு உணர்ச்சியுண்டுபண்ணக் காரணமாக விருப்பவை முற்சொன்ன நரம்புகளாம். நாம் கை, கால், கண் முதலிய உறுப்புகளை அசைப்

பதற்குதவியாயிருக்கும் நரம்புகள் பிற் சொன்னவைகளாம். முற் சொன்ன (Sensory nerves) நரம்பின் வழியாக சமாசாரம் விநாடிக்கு III அடி விகிதமாக ஓடும். பின் சொன்ன (motor nerves) நரம்பின் வழியாகச் சமாசாரம் ஓடுவது விநாடிக்கு 98 முதல் 131 அடிவரையில் வேகமாக ஓடும். இதெல்லாம் தந்தியின் மின்னல் வரும்வேகமாகாது.

ஷேக்ஸ்பீயர் முதலிய மகாகவிகள் காவியங்களை மனதில் தியானித்தபோதும், சங்கராசாரியார் முதலிய தெய்வப் பிறப்புள்ளவர்கள் வேதாந்த உண்மைகளை யோஜித்தபோதும், அவர்கள் மண்டையினுள், வெவ்வேறு எண்ணத்துக்குத் தகுந்த நரம்புகளின் சேர்க்கை இருந்துதானிருக்க வேண்டும். எப்படி குறித்த வீணைத்தந்தியை அடித்தால் வெவ்வேறு விதமாய் எவ்வளவோ விதமான மதுர துவனிகள் உண்டாகின்றனவோ அம்மாதிரியே நரம்புகள் சிலவாயினும் மகாகவி, மகாசாஸ்திரிகள் அற்புத எண்ணங்களும் தந்தியிலிருந்து பாட்டுப்போலவே வருகிறது. அவையில்லாமல் இவை வரா. என்ன வித்துவானானாலும் வீணைத்தந்தி யறுந்தால் என்ன செய்வார். ஆனால் வெறும் (catgut) நரம்புத்தந்திகளுக்கும் அதிலிருந்து வரும் மதுர துவனிக்கு என்ன சம்பந்தம். அது இதற்கு எப்படிக் காரணமாகும்? என்ன ஆச்சரியம்! கம்பி கண்ணுக்கு தெரியும், அளவிடக்கூடும்; எண்ணங்களோ இந்திரியங்களுக்குஎட்டாது, தேசத்தில் அடங்காது. எப்படி இவை இரண்டும் ஓரிடத்தில் குடியிருக்கின்றனவோ? அன்றியும், "*ஒவ்வொரு சந்தோஷ உணர்ச்சியும், துக்கானுபவமும், அற்ப எண்ணமும், மனதில் தியானமும், வாதத்தில் சொல்லும் ஒவ்வொரு யுக்தியும் உண்டாவதற்கு குறித்த சுத்தவாயும், (oxygen) கரியும், (carbon) மற்றுமுள்ள பௌதிகங்களும் சேர்ந்து தேகத்திலோரிடத்தில் செலவாயிருக்கவேண்டும்." பௌதிகமான காய்கறி இல்லாது சின்மயமான எண்ணம் உண்டாகாது எனத்தெரிகிறது. †சிலர்மாத்திரம் தேகத்துக்கு ஆகாரம் குறைந்தாலும் புத்தியின் வேலைகளுக் குறைவு இல்லாததுமன்றி, தீவிரமும் உண்டாகுமென்று சாதிப்பார்கள். அப்படியானல் தேகமின்றி, மூளைநரம்பன்றி, அதைப்போஷிக்கும் ஆகாரமின்றி மனது வேலை செய்யுமா? அதை ரூபிப்பதற்கு தேகத்தை விட்ட ஆத்துமா பேச, அல்லது சிந்திப்பதை நாம் பார்த்ததில்லை. பார்ப்பது அசாத்தியமாயிருக்கிறது. ஆனல் கூடும்என்று சொல்வோரும்உளர்.‡ ஆயினும் சுரத்திலும் மரணகாலத்திலும் அபரிமிதமான நுட்பமாய்ப்பேசியிருக்கிறார்களே. ஆகையால் பலம் குன்ற புத்தி அதிகம் அன்றல்லவா? இந்த அபிப்பிராயங்கள் பேதங்களால் இவ்வாறு சொல்வார்கள். மூளை அதாவது தேகமும், சித்தும் மனிததேகம் இருமுகம் படைத்த ஓர் அதிசயம். ஒரு பக்கம் ஆத்துமா, ஒரு பக்கம் ஜடதேகம் அல்லது மூளைநரம்பு. அவை ஒன்றுக்கொன்று சம்பந்தம் சொல்வது அசாத்தியம். மற்றும் சிலர், புத்திக்கு நரம்புதான் காரணம்: பித்தப்பையிலிருந்து பித்தம் ஊறுவது போல் மூளையிலிருந்து புத்தி வரும் என்பார்கள். நம்மவர் வெற்றிலை போட்டால் உண்டாகும் மதம் போன்றது என்பார். நம்முடைய வேதாந்திகள், அர்த்தநாரீசுவரர் போன்றது என்பார். பார்வதியை ஈசுவரன் சிருஷ்டித்து தன்புறம் வைத்ததுபோல், சித்து தேகத்தையும், பரமாத்மா ஜகத்தையும் கற்பித்து தன்னொடு இடைவிடாது வைத்தானென்பார் பின்னும் சிலர்.

ஏ. ஸ்ரீனிவாஸய்யர், பி. ஏ.

* Bain's Practical Essays. † Huxley's Essays. ‡ Anne Besant.

---

## உபாத்தியாயர் பக்கம்.

### பிள்ளைகளின் இயற்கை.—II.

(BY A LICENTIATE IN TEACHING.)

பிள்ளைகளின் சுறுசுறுப்புத்தனத்தையும் விளையாட்டுத்தனத்தையும் நல்வழியில் திருப்புவது உபாத்தியாயரின் கடமையென்று முன்சொன்னோம். அது எப்படியென்று ஒருவாறு தெளிய உரைப்போம்.

1. **சுறுசுறுப்புத்தனம்.**—பிள்ளைகளுக்கு இயல்பாயுள்ள சுறுசுறுப்புத்தனம் காரணமாக அவர்கள் வகுப்பில் பாடம் நடக்கும்பொழுது இடை இடையே கை துறுதுறுத்து விஷமங்கள் செய்வது வழக்கமென்று சொன்னோம். எந்தப்பாடம் நடக்கும்பொழுதும் கொஞ்சநேரம் சொல்லிக்கொடுத்த பிறகு சொல்லிக்கொடுத்த அம்சங்களை பலகையிலோ நோட்புத்தகத்திலோ எழுதச்செய்தால் பிள்ளைகளின் துறுதுறுத்தகைகளுக்கு ஒருவேலை யேற்படும். அப்படியெழுதச் செய்வதினால் வகுப்பு முழுவதும் சப்தமின்றியிருப்பதுடன் அம்சங்கள்மனதில் நன்றாய்ப் படுதல், கையெழுத்துப்படிதல் முதலிய லாபங்களும் ஏற்படும். விஷமமும் பிறருக்குத் தீங்கும் விளையாது. எழுதத்தெரியாத சிறியபாலர்கள் (Infants) வகுப்பில் அடிக்கடி 'டிரில்' (Drill) நடத்தவேண்டியது. இன்னம் ஒரு உதாரணம்: ஒரு இலையோ அல்லது புஷ்பமோ ஒன்றைக்காண்பித்து அதை நன்றாய் கவனத்துடன் பார்க்கச்செய்து 'ஸ்கூல் தோட்டத்தில் இந்தமாதிரி இலை யல்லது புஷ்பம்இருக்கிறது; அதை யார்கண்டு பிடித்துப் பறித்து வருகிறீர்கள் பார்ப்போம்' என்று பிள்ளைகளைப்பார்த்து உபாத்தியாயர் சொன்னால், உடனே பிள்ளைகள் ஸ்கூல் தோட்டத்தில் அங்குமிங்கும் ஓடி குறிப்பிட்ட இலையையோ அல்லது புஷ்பத்தையோ பறித்துவரமுயலுவார்

கள். அவர்கள் கொண்டுவராமற்போனாலும், கொண்டுவருவது சரியானதாயில்லாமற்போனாலும், அங்கும் இங்கும் ஓடினதால் கைகால்களின் துறுதுறுத்தனம் சற்றுநேரம் அடங்கியிருக்கும். பிள்ளைகளுக்கு அது விளையாட்டாகத் தோன்றுமாதலாலும் நாம் முன்னதாய்க் கொண்டுபோகவேண்டும் என்று ஒவ்வொருவரும் ஆவலுடன் ஓடுவதாலும் பிள்ளைகளுக்கு உண்டாகும் ஆநந்தத்திற்கு அளவில்லை. ஓடுவதினால் அவயவங்கள் திடப்படும். இது தவிர ஸரியான இலை, பூவைக்கொண்டுவந்துவிட்டாலோ அவர்களுக்கு ஸ்திரமாய் ஏற்படுகிற லாபம் ஒன்றுண்டு. குறித்த இலை யல்லது புஷ்பம், இதைக்கண்டுபிடிப்பதில் அனேக இலை புஷ்பங்களை யொப்பிட்டுப்பார்த்து சமான மல்லாதவைகளை நீக்கிச் சமானமானவைகளைத்தேர்ந்தெடுக்கும்படியான பகுத்தறிவு உண்டாகும். இந்தலாபங்களெல்லாம் உண்டென்ற சங்கதியை கொஞ்சங்கூட அறியாமல் சிறு குழந்தைகளைக் காலமே முதல் சாயங்காலம் வரையில் மணியொன்றுக்கு ஒரு பாடம் வீதம் 6 மணி நேரம் மறித்துப்போடலாமா? நல்ல பகுத்தறிவுடைய வயது வந்தவர்களாகிய நாம் ஒரு உபந்யாஸம் கேட்டுக்கொண்டிருப்பதாய் வைத்துக்கொள்ளுவோம். அது கேட்க மிக இனிமையாயிருந்தபோதிலும் அதினால் நமக்கு நூதனமும் முக்கியமுமான சங்கதிகள் அனேகம் தெளிவாய் விளங்குவதாயிருந்தாலும், உபந்யாஸம் சொல்லுகிறவர் கொஞ்சம் இளைப்புக்காக நிறுத்தினால், சும்மா உட்கார்ந்து கேட்டுக்கொண்டிருந்த நமக்கு என்ன சிரமம்! இருந்தாலும் அவர் நிறுத்திய அந்த நான்கு நிமிஷங்களுக்குள் எவ்வளவோ சந்தோஷத்துடன் கைகால்களை யசக்கிக்கொடுத்துக் கொண்டும் மூச்சு தீர்க்கமாய் விட்டுக்கொண்டும் இருமி தொண்டையைக் கனைத்துக்கொண்டும் எழுந்திருந்து நின்றும் அந்தப்புறம் இந்தப்புறம் திரும்பியும் நாம் நம்மை சீர்திருத்திக் கொள்ளுகிறோமல்லவா? அதாவது பெரியவர்களுக்குக்கூட கை கால்களை அசைக்காமல் உட்கார்ந்திருப்பது கஷ்டம்தான். எப்பொழுது அந்த நிலைமை மாறி எதேச்சையாய் அவைகளை யாட்டியசைக்கப் போகிறோம் என்ற ஆவல் உண்டாகும். மேலும் நம்முடைய படம் (photo) எடுத்துக்கொள்ள நாம் நிதானமாய் உட்கார்ந்திருக்கவேண்டியது இரண்டு மூன்று விநாடிகள்தானே. அந்தக்காலங்கூட சரியாய் இருக்க முடியாமல் எவ்வளவு பேர்கள் தங்கள் (photo) படங்களைக் கெடுத்து விடுகிறார்கள். சும்மா இருப்பது பெரியவர்களுக்கே இவ்வளவு கஷ்டமான வேலையானால் பிள்ளைகளுக்கு அது எவ்வளவோ மடங்கு அதிக கஷ்டமாயிருக்குமென்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

2. **விளையாட்டுத்தனம்.**—பிள்ளைகளுக்கு இயற்கையான குணங்களில் மற்றொன்று விளையாட்டில் பிரியம். இது முதலில் சொல்லிய குணத்துடன் ஒட்டியதுதான். பிள்ளைகள் எப்பொழுதும் குதூகுலத்துடன் விளையாடிக்கொண்டே யிருப்பார்கள். ஆகையால் சிறு பிள்ளைகளின் வகுப்பிற்கு வயது சென்றவர்களையாவது அசௌக்கிய ஸ்திதியில் உள்ளவர்களையாவது உபாத்தியாயர்களாக, ஏற்படுத்தகூடாது. இவர்களுக்கும் பிள்ளைகளுக்கும் ஒத்து வரமாட்டாது. வயது சென்றதினாலும் அசௌக்கியத்தினாலும் உபாத்தியாயர்களுக்கு குதூகலமில்லாமலும் எதைக்கண்டாலும் அருவருப்பட்டுக்கொண்டுமிருப்பார்கள். அடிக்கடி கோபம் வரும், உபாயப்பிழைகளைக்கூடப் பொறுத்துக்கொள்ளக் கூடாதவர்களாய் எடுத்ததெற்கெல்லாம் பிள்ளைகளைத் தண்டிப்பார்கள். இந்த முசுடுகளுக்கும் சதா ஓடியாடிச் சிரித்துமனக்கவலையன்னியில் விளையாடிக்கொண்டிருக்கும் இயற்கையையுடைய சிறுபிள்ளைகளுக்கும் எவ்வளவுக்கெவ்வளவு தூரம்? சிறுபிள்ளைகளுடன் மனது கலந்து அவர்களுடன் சேர்ந்து விளையாடி இவரும் நம்மில் ஒருவர்தான் என்ற எண்ணம் பிள்ளைகளுக்கு உண்டாக்கக்கூடியவர்தான் அவர்களுக்கு உபாத்தியாயர்களாக ஏற்படத் தகுந்தவர்கள். பிள்ளைகளின் விளையாட்டுத்தனத்துக்கு அனுகூலமாய் உபாத்தியாயர் ஏற்பாடுகள் செய்யவேண்டியது. (Infant) சிறுவர்வகுப்புப் பிள்ளைகளுக்கு மற்ற வகுப்புப் பிள்ளைகளுக்கு ஏற்படுத்துவபோலப் பாடங்கள் ஏற்படுத்தாமல் விளையாட்டுகள் ஏற்படுத்த வேண்டியது. நமது நாட்டில் சிறுபிள்ளைகளுக்குள் எத்தனையோ விளையாட்டுகள் உண்டு. அவைகளெல்லாம் இப்பொழுது சில கிராமாந்தரங்களில் தவிர வேறு இடங்களில் காணோம். அவை (Infant) சிறுவர் வகுப்பு பிள்ளைகளுக்கு மிகவும் தகுந்தவை. அவைகளேயல்லாமல் போனாலும் பின்வருமாறுவது செய்யலாம். வகுப்பில் உள்ள பிள்ளைகளுள் ஒருவன் கண்ணைக்கட்டிவிட்டு மற்றவர்களில் ஒருவனை அந்த அறையை விட்டு வெளியே போகச்செய்து பிறகு இந்தப்பையன் கண்ணைத்திறந்துவிட்டு இருக்கிற பிள்ளைகளை கவனமாய்ப்பார்த்து வெளியில் போனவன் இன்னானென்று சொல்லச் செய்யலாம். அறையிலுள்ளவர்களில் ஒருவனை எதாவதொன்றை கெட்டியாய்ப் படிக்கச்செய்து வெளியிலுள்ளவனை பேசினது இன்னாரென்று கவனித்துச் சொல்லச் சொல்லலாம். இதுகளெல்லாம் பிள்ளைகளுக்கு விளையாட்டாகத்தானிருக்கும். ஒரு விளையாட்டு ஒருசமயத்தில் பிடிக்காமல் போனால் அவர்கள் இஷ்டப்படியே விட்டுவிட வேண்டியது. இந்த விளையாட்டுகளில் பிள்ளைகள் வேடிக்கையாய் சந்தோஷத்தை யடைவதுடன் கண்ணினால் பார்க்கிற திறமையும் காதினால் கேட்கிற திறமையும் அவர்களுக்கு விர்த்தியாகும். உபாத்தியாயரிடத்தில் பிரியமும் அவருடன் எப்பொழுதும் கலந்திருக்க விருப்பமும் பள்ளிக்கூடத்தை நினைத்தால் சந்தோஷமும் உண்டாகும்.

## சிறுவர்க்கானபக்கம்.

[விவேக சிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

### சோம்பேறிப் பையல் கதை.*

தர்மபுரம் என்னும் ஒரூரில் "மல்லிகை" என்று ஒரு சிறுவனிருந்தான். அவன் தொட்டால் வாடும் மல்லிகை மலர்போலும் மெல்லியதன்மையுடையோனுய்த், தனக்கெது இலகுவாயும் இதமாயுமிருக்குமோ அதையே செய்து கடினமான காரியங்களை வெறுத்ததனல், அவனுக்கு அப்பெயரிடப்பட்டது. அவனை அவன் தந்தை, வீட்டில் வைத்துக் கொள்ளாமல் "இளமையிற்கல்" என்ற முதுமொழியை அநுசரித்து அதிபாலியத்திலேயே அடுத்த ஊரில் இருந்த "உழைப்பு" என்னும் ஓர் கண்டகரான உபாத்தியர்ாரிடத்தில் படிக்கவைத்தார்.

அவ்வுபாத்தியாயர் குணத்தை அவருடன் பழகிச் செம்மையாயறிந்தவர்கள். அவர் மிக்கவும் நல்லவரென்றும்; முதியோர் இளையோர் முதலான அனைவர்க்கும் அநேக நன்மைகளைச் செய்திருப்பவரென்றும் சொல்வார்கள். அவர் இவ்வுலகம் தோன்றியது முதல் நெடுநாளாக இருந்தவருதலினுல் பல பேருக்குப் பல உபகாரங்களைச் செய்திருக்க வேண்டும்.

அவர் இவ்வளவு நல்லவராயிருந்தும், வேலையென்ருல் எங்கித்தவிக்கும் சோம்பேறிகளுக்கு அவரைக் கண்டால் மிகவும் வெறுப்பாயிருக்கும். அவர் பள்ளியிற் பிள்ளைகள் தத்தமக்கிட்ட பாடங்களைச் சரியாகக் கவனித்துப்படியாமல் கணப்பொழுதேனும் வீணிற்போக்க இடங்கொடாமல் அவர்களைக்கண்டித்து அல்லும் பகலும் வறுத்தெடுப்பாராதலினுல், அவர் சொல்லும் வார்த்தைகளும் அவரது சுபாவமும் மல்லிகைக்குச் சற்றும் பிடிக்கவேயில்லை.

ஆதலால், பள்ளிக்கு வந்து ஒருவாரம் ஆவதற்கு முன்னே அவன்—'அப்பா! இந்தப் பிடுங்கல் யாரால் சகிக்க முடியும்? இதனை விட்டொழிந்து ஊர்போய்ச் சேருவதே உத்தமம்; எங்கு சென்ருலும் இத்துர்முகியான உபாத்தியாயர்போலும் கொடியவர் எவரும் இராராதலின் போய்விடுவதே நன்மை'—என்று துணிந்து, மறுநாட்காலையில் கையில் ஒருவேளை உணவும் வழிச்செலவுக்குச்சிறிது பணமுமெடுத்துக் கொண்டு, ஒருவருடனும் சொல்லாமல் புறப்பட்டு ஊர்தோறும் திரியப்போயினன்.

அவன் அவ்வாறு சிறிது தூரம் சென்றதும், வழியில் சிந்தனையுற்ற பார்வையோடு மெல்ல மெல்ல நடந்து செல்லு மொருவரைக்கிட்டி நெருங்க, அவர் இவனைப்பார்த்து கனிவோடும் சிறிது கடுமையோடும்—'அடே பையா! எங்கு நின்று எங்கு போகிருய்?' என்றுகேட்க, மல்லிகை தானெருநாளும் பொய்யுரை சொல்லி அறியானுதலின் சற்றுத்தயங்கி நின்று பின்னர்—'ஐயா! உழைப்பென்பவர் பள்ளிக்கூடத்தில் என் தகப்பனுர் என்னைப் படிக்கவைத்தார். ஆயினும் அவரது சிடுசிடுப்பும் கடுகடுப்பும் எனக்கு முற்றும் பிடியாததனுல் அவரைவிட்டு வேறு எங்காவது அவர் கண் முன் நில்லாமலும் அவர்கடுஞ்சொற் கேளாமலும் தொலைந்து போகலாமென்று போகின்றேன்'—என்று, உள்ளதை உள்ளபடியுரைத்தான்.

அதுகேட்டு அப்பெரியவர்—'நல்லது, நானும் கூட வருகிறேன். உழைப்பில்லாத இடம் ஒன்றுண்டாயின் அதை நானும் சாரவிரும்புவேன்'—என்ன, அவ்வாறே இருவருஞ்சேர்ந்து சற்று தூரம் சென்றதும், அவ்விடத்தில் வழி நடைக்கருகே ஓர் களத்தில் சிலர் போர் போட்டுக் கொண்டிருப்பதைக் கண்டு, மல்லிகைமனமகிழ்ந்து—ஆ! ஆ! இந்த இளம் வெயிலில் பக்ஷிகள் மரங்களிலும் செடிகளிலுமிருந்து இனிமையாகப் பாடிக்கொண்டிருக்கக் காதாரக்கேட்டு ஆனந்தித்து, உல்லாசமாய், கமகமவென்று பரிமளிக்கும் புதிய வைக்கோலை வாரிப் போர்போடுவது, உழைப்பின் பள்ளியில் ஓயாமல் பாடம்படித்து அவர்பால் அடியும் வசவுமுண்டு வருந்துவதிலும் எவ்வளவு சுகமாயிருக்கும்!—என்று சொல்லிக்கொண்டு கற்சுவர்மேலாக எட்டிப்பார்த்தான். பார்த்ததும் துணுக்குற்றுப் பின்வாங்கி,—அப்பப்பா! ஓடிப்போவோம் இங்கு நின்ருலவர் பிடித்துக்கொள்வார்—என்று தன் வழித்துணைவரைக் கையைப் பிடித்துப் பரபரப்பாயிழுக்க, அவர்—யாருன்னைப்

* "The Truant Boy" translated from Nathaniel Hawthorne.

பிடிப்பவர் என்ன, மல்லிகை—அதோபாரும், உழை
ப்பென்னும், உபாத்தியாயர் அவர்களுக்கு மத்தியில்
வந்து நிற்கிறார்—என்று, அவ்விடத்தில் வேலைக்கா
ரர்களுக் கெஜமானனாய் அவர்களை வேலைவாங்கிக்
கொண்டு பரபரவென்று நின்ற ஒருவரைக் குறித்
துக்காட்டினான். இதென்ன புதுமை! அவரது முக
மும் சாயலும் முற்றும் உழைப்பேபோலிருந்தன!

அது கண்டு வழித்துணைவர் மல்லிகையை நோக்கி
'அப்பா! பயப்படாதே. இவர் உழைப்பென்னும்
உபாத்தியாயரல்லர். அவருடைய தம்பிகளிலொரு
வர். இவர் பெயரும் உழைப்புத்தான். இவர் உழ
வுத்தொழில் பயின்று வியவசாயம் செய்பவர். அறி
ந்தவர்கள் இவரை உபாத்தியாயரிலும் கொடியவ
ரென்று சொல்லுகிறார்கள். ஆயினும் நீ இவரிடத்
தில் வேலைக்கிருந்தாலன்றி உன்னை வருத்தப்படுத்த
மாட்டாராதலின் வருந்தாதே'—என்றார். அது கே
ட்டு மல்லிகை—'அப்படியாயின் நல்ல வேலைதான்;
ஆனாலும் எனக்கு இவ்விடத்தில் கணப்பொழுதேனும்
நிற்க இஷ்டமில்லை; அப்பாற் செல்வோம் வாரும்'
என்றான்.

அவ்வாறே சற்று தூரம் சென்றதும் பொம் பொம்
பொம்மென வாத்திய கோஷம் காதிற் கேட்க, மல்
லிகை செவிகொடுத்துக் கவனித்துப் பார்த்து, அது
இராணுவ வாத்தியமென்று தெரிந்து, விரைந்து
சென்று அதனைப்பார்ப்போமென்று தன்வழித்துணை
வரைத் துரிதப்படுத்தி சீக்கிரம் இராணுவம் செல்லு
மிடத்துக்கு வந்து, போர்ச்சேவகரது அழகான
உடையையும், தலையில் இறகுகளால் அலங்கரிக்கப்
பட்ட பாகையையும், கையில் பளபளவென்று பி
ரகாசிக்கும் துப்பாக்கியையும், அதிமனோஹரமான
வாத்திய கோஷத்தையும் கண்டு, அவர் பின் எவ்
வளவு தூரமாயினும் தொடர்ந்து போகலாமென்று
அளவற்ற ஆசை கொண்டான். உடனே, 'நில்லுங்
கள்! துப்பாக்கியைத் தோளில் தாங்குங்கள்! விரை
ந்து செல்லுங்கள்!' என்று தீரமாயதட்டிப்பேசின
வார்த்தைகள் காதிற்படவே, மல்லிகை திடுக்கிட்டுப்
பயந்து ஏக்கங்கொண்டான். ஏனெனில் இராணுவ
வீரருக்கு அவ்வண்ணம் உத்தரவிட்ட சேனாபதியின்
குரல் நாள்தோறும் உழைப்பின் பள்ளியில் உழைப்
பின்வாய்ப் பிறந்த தொனிபோலுமிருந்தது. பின்
னர் அச்சேனைத்தலைவரின் முகத்தை அவன் பார்க்க
அதுவும் அஞ்சச்சும் உழைப்பின் முகம் போலவே
யிருந்தது. அவர் உபாத்தியாயரைப்போல் பிரம்பு
ம் கையுமாய் நில்லாமல், தலையில் இறகுகளால் அலங்
கரித்த குல்லாவும், தோளில் தங்கத்தாற் செய்த
வில்லைகளும், உடம்பில் சரிகைச் சட்டையும், இடுப்
பில் செவப்புப்பட்டையும், கையில் நீண்டவாளும்
தரித்திருந்தாராயினும், சிறுவன் அவர் உழைப்பென்
னும் தனது உபாத்தியாயர் தாமெனக்கருதி,—'நா
மிங்கு நின்றோமாயின் நம்மைப்பிடித்துச் சேவகரா
கச் சேர்த்து விடுவாராதலின் ஓடிப்போவதே நலம்
வாரும்'—என்று தன்வழித்துணைவருடன் நாவுளறி
நெஞ்சம்பதறிச் சொன்னான். அவர்—'நீ எண்ணியது
சரியன்று. இவர் உபாத்தியாயரல்லர். அவரது
மற்றொரு சகோதரர்; இராணுவத்திலேயே வெகு
நாளாய் உத்தியோகம் செய்துவருகிறார். ஜனங்கள்
இவரை அவ்விருவரினும் பொல்லாதவரென்கிறார்கள்.
ஆயினும் நீயும் யானும் அதுபற்றி அஞ்சவேண்டுவ
தில்லை' என்று, சாந்தமாகச் சொன்னார். 'நல்லது,
ஆயினும் இவர்களைப் பார்த்தது போதும், அப்பாற்
போவோம் வாரும்'—என்று மல்லிகை புறப்பட்
டான்.

பின்னர் அவ்விருவரும் அங்ஙனம் போகையில்,
பாட்டையின் ஓரத்தில் ஓர்வீட்டிற்கு வந்து சேர்ந்
தார்கள். அவ்விடத்தில் சில இளைஞரும் அழகிய
பெண்களும் சிரித்துக்களித்து உல்லாசமாக நாட்டி
யமாடிக்கொண்டிருக்க, அவர்களை மல்லிகை கண்டு
அது போலுமின்பமான காட்சி ஓரிடத்தும் அது
வரையிற் கண்டதில்லையாதலின், மிகவும் மகிழ்ச்சி
யுற்றுப் பெரியவரைப் பார்த்து—'நாமிவ்விடத்தே
இருந்துவிடுவோம்; உழைப்பென்னு முபாத்தியாயர்
இங்கு தலைகாட்டவும் துணியார்' என்றான்.

இங்ஙனம் சொல்லிமுடிக்குமுன், கீதம் வாசிப்ப
வன் முகம் எதிர்ப்பட அவனைப்பார்த்ததும் அவன்
உழைப்பேபோலிருக்கக்கண்டு பயந்து,—'இது என்ன
மாயம்! உலகத்தில் உழைப்பொருவரைத்தவிர வே
றொருவருமில்லையோ. எங்குசென்றாலும் இந்தப்பா
ழும் உழைப்புத்தானா? அவருக்கித்தனை நன்றாகக்
கீதம் வாசிக்கத்தெரியுமென்று யார்தானெண்ணுவார்
கள்?'—என்றான். அதுகேட்டுப்பெரியவர்,—'இவன்
உன்னுடைய உபாத்தியாயர் அல்லன். அவரது மற்
றொருசகோதரன். இவன் பரதசாஸ்திரம் பயின்று
சங்கீதவித்துவானாகித் தன் சகோதரர்களைக்கண்டுவெ
ட்கமடைந்து, தன்பெயரைச் 'சந்தோஷம்' என்று
மாற்றிவைத்துக்கொண்டானாயினும், இவன் சொந்தப்
பெயர் உழைப்புத்தான். இவன் குணத்தை நன்றாக
அறிந்தவர்கள் இவனை எல்லோரினும் பொல்லாதவ
னென்கிறார்கள்'—என்றார். அது கேட்டுப் பையன்—
'எனக்கிங்கிருக்கச் சற்றும் இஷ்டமில்லை, அப்புறம்

போவோம் வாரும்'—என்று, அவரை இட்டுக்கொண்டு அப்பாற் போகையில், அங்கு ஓர் மரத்துநிழலில் சிலர் சோம்பலாய் மறிந்து கிடப்பதைக்கண்டு உள மகிழ்ந்து தன் நண்பரை நோக்கி—'இவ்விடத்தில் நாமும் சற்றே படுத்துக் களைதீர்வோம் வாரும். உழைப்பென்னும் உபாத்தியாயர் இப்படிப்படுத்துறங்குவார்களைப் பார்க்கவும் பொருராதலினுல் இங்கு எட்டியும் பாரார்—என்று சொல்லிக்கொண்டு மல்லிகை அவர்களை நெருங்க, உடனே அவர்கள் யாவரினுமிக்க சோம்பேறியாய் விழுந்து கிடக்கும் ஒருவனைப்பார்த்ததும், அவன் முகம் உழைப்பின் முகம்போலவேயிருக்கக்கண்டு பின்னிட்டு நின்றான். அது கண்டு வழித்துணைவர்—'இந்த 'உழைப்பு' என்பவர்களின் வம்சம் பெரியவம்சம். இவர்கள் அநேக சகோதரர்கள். இவனும் கிழ உபாத்தியாயர் தம்பிகளிலொருவன்தான். இவன் பிறந்தது முதல் தன் ஊரையும் இனத்தையுந்துறந்து, தூரதேசத்தில் வளர்ந்து சோம்பல்தனமெல்லாம் கற்று தன்பெயரை "ஒன்றுஞ் செய்யான்" என மாற்றிவைத்துக்கொண்டு சுகமாகக் காலம் கழிப்பவனைப்போல மேலுக்குக்காட்டுகிறானேயன்றி, உள்ளபடி ஆராயின் இவனே மற்றை யாவரினும் வருத்த முறுவோன்'—என்றார். அது கேட்டு அச்சிறுவன் பொறுக்க முடியாத துக்கமுற்றுப் பொருமியழுது,—'இனி நானுழன்றதுபோதும். எங்கு சென்றாலும் உழைப்பில்லாதவிடம் உலகில் இல்லையாதலின் இனிப்பாடசாலைக்குத் திரும்பிப்போவதே உத்தமம்' என்று—திரும்பிவிட்டான்.

இவ்வாறு ஊரூராய்த்திரிந்துழன்றதனுல் மல்லிகைக்கு நல்லபுத்திவந்து அன்றுமுதல் தன்பாடங்களை உழைத்துப்படித்து முயற்சிசெய்தல் வீண்பொழுது போக்குதலினும் துன்பமானதல்லவென்றுசண்டான். அவன் உழைப்புடன் பழகப்பழக அவரது சுபாவம் முன்போல் வெறுப்பாயிராமல் நாளுக்கு நாள் அவரிடத்தில் பிரியமுண்டாகி முடிவில், அவர் தன்னை மகிழ்ந்து பார்க்கும்போதெல்லாம் அவர் முகம் தனது அருமைத்தந்தை முகம்போல இனிமையாக இருக்கக்கண்டு, சந்தோஷித்துப் படித்துவந்தான்.

முற்றும்.

**எஸ். முத்து அய்யர், பி. ஏ.**

---

## விசேஷக்குறிப்புகள்.

**ஷெரிப்மீடிங்கு.** சென்ற மாசத்து சஞ்சிகை வெளியான பிறகு நடந்த முக்கிய விசேஷங்களில் சென்ற மார்ச்சு ௴ 20௳ சென்னை விக்டோரியா பப்ளிக் ஹாலில் சென்னை நகர் ஷெரிப் அவர்கள் விளம்பரப்படி கூடிய பொதுக் கூட்டம் விசேஷமானது. அந்த மஹாசபைக்கு இந்நகரிலுள்ள ஐரோப்பியர்களும் இந்தியர்களும் வந்திருந்தார்கள். அப்பொழுது இந்தியா கவர்ன்மெண்டார், மார்ச்சு ௴ 10௳ சட்டமாகச் செய்த 'டாரிப் ஆக்ட்டில்' பருத்திநூல் சரக்குகளுக்கு மட்டும் இறக்குமதி விதிக்காது விலக்கிவைத்தது அநியாயமென்றும், கவர்ன்மெண்டார் அவர்களுடைய செலவு அம்சங்களையும், இராணுவச் செலவு, சீமையில் பிடிக்கும் செலவு இவைகளையும் குறைத்து வரவுக்குச் செலவு சரிக்கட்டிப்போகும்படி செய்துகொண்டிருக்கலாமென்றும் அவர்கள் அபிப்பிராயத்தைத்தெரிவித்து ஒரு தீர்மானம் செய்தார்கள். அங்கே பேசினவர்களில், மிஸ்டர் ஜியார்ஜ் ஆர்பத்நட், மிஸ்டர் எர்ட்லி நார்டன், மிஸ்டர் ஆர். ஜி. ஆர். இவர்களும் மற்றவர்களும் கவர்ன்மெண்டார் இத்தேசத்தார் மீது அநியாயமாக அதிகவரி போட்டு வருத்துவதைப்பற்றிக் கண்டித்துப் பேசினார்கள்.

---

**மிஸ்டர் ஹியூம்.** சென்ற 8-வருஷ காலமாக இந்தியாவுக்கு அனுகூலமாக இந்தியர்களோடுசேர்ந்து உழைத்த காங்ரெஸ்சபையை முன்னுக்குக் கொண்டுவந்த இந்தியாவின்ஜனோபகாரியாகிய மிஸ்டர் ஏ.ஓ. ஹியூம் அவர்கள் சென்ற மார்ச்சு௴ 19௳ பம்பாயைவிட்டுக் கப்பலேறிச் சீமைக்குச்சென்றார். அவர் இனி இந்தியாவுக்கு மறுபடியும் வந்துபோவது அசாத்தியமென்று சொன்னதால் பம்பாய்வாசிகளெல்லாரும் சேர்ந்து அவருக்கு சர்வோபசாரங்களும் செய்து நன்றியறிதல் கூறி வந்தனவழிபாடுகள்செய்து அவரை ஊருக்கனுப்பினார்கள். மிஸ்டர் ஹியூம் இந்தியர்கள் தங்களிடத்துள்ள குறைகளை நிவர்த்தித்துக் கொண்டாலன்றி அவர்கள் ஒருஜாதியாக உருப்பட்டு முன்னுக்கு வருவது கூடாமையென்று சொல்லி, நம்மவர்கள் சீர்திருத்திக்கொள்ளவேண்டிய குற்றங்களில் சிலவற்றை யெடுத்துரைத்துப் புத்திமதிகூறி, யாவரும் மனமுருக விடைபெற்றுக்கொண்டு சீமைக்குச்சென்றார்.

---

**இந்தியா வரவு செலவு கணக்கு.** மார்ச்சு ௴ 22௳ வியாழக்கிழமைய தினம் கல்கத்தாவிற் கூடிய இராஜப்பிரதிநிதி சட்டநிரூபண சபை முன் இந்தியா அரசிறை மந்திரியாகிய கனம் மிஸ்டர் வெஸ்ட்லாண்ட் அவர்கள் 1894-95ம் வருஷத்துக்கு இந்தியா வரவு செலவு திட்டக்கணக்கு விவரம்போட்டிருப்பதைப்படித்து வியாக்கியானம்செய்து விளங்கவைத்தார். மார்ச்சு ௴ 1௳யில் இந்தியா வரவு செலவு திட்டக்கணக்கு விவரம்போட்டுப் பார்த்தபொழுது இந்த வருஷத்துக்கு வரவு தொகை மொத்தத்தை விடச்செலவு தொகை மொத்தம் 3½க் கோடி ரூபாய் அதிகமாக விருக்கக் காணப்பட்டது. மார்ச்சு௴ 10௳ 'டாரிப் ஆக்ட்' சட்டமாகச் செய்யப்பட்டபின் செலவைக் குறைக்க யத்தனித்து, உபயோகமான மராமத்து வேலைகள், ரயில்போட்டல், கால்வாய் வெட்டல் முதலிய தேச வளப்ப விர்த்திக்கனுகூலமான வேலைகளை நிறுத்தி 3½க் கோடியாகவிருந்த அதிகப்படிச் செலவை 2 கோடியே 92 லக்ஷத்து 31 ஆயிரத்துக்குக் கொண்டுவந்தார். செலவு தலைப்பில்

இப்படி யேற்நின்று இந்தத்தொகையைச் சேகரிக்க நூதனமாக வழிவகை தேடவேண்டிய தவசியமா யிருந்ததால் அதற்கு மூன்று ஏற்பாடுகள் செய்து அவற்றால் இந்தியா கவர்ன்மெண்டார் வருமானத்தை ஒருவாறு அதிகப்படுத்திக் கொண்டார்கள். அவை முதலாவது 'டாரிப் ஆக்ட்'டினால் விதித்த இறக்குமதி வரி. இதனால் வரக்கூடிய அதிக வரும்படி கோடியே 20 லக்ஷத்தில் இவ்வரி வசூல் செய்யப்பிடிக்கும் சிப்பந்திச்செலவு ரூபாய் 6 லக்ஷமும் போனால் பாக்கி கோடியே 14 லக்ஷம் மிகுதி. பஞ்ச நிவர்த்திக்காகவும் பஞ்சம் வராதபடி பாதுகாப்பதற்காகவும், ரயில்வேகள் போட்டும் கால்வாய்கள் வெட்டியும் தேச வளப்பத்தை விர்த்திபண்ணத்தக்க வேலைகள் செய்துவர வருஷா வருஷம் 1½க் கோடி ரூபாய் செலவிட்டு வந்தார்கள். இது லார்ட் லிட்டன் காலத்தில் இதற்கென்று பிரத்தியேகமாக விதிக்கப்பட்ட 'லைசென்ஸ் வரி' வசூலிலிருந்து வந்ததொகை. இதில் ஒருபாகம் கவர்ன்மெண்டார் பஞ்ச நிவர்த்திக்காசப் போட்ட 'பெங்கால்-நாகப்பூர் ரயில்வே,' 'இந்தியன் மிட்லாண்ட் ரயில்வே' இவைகளினால் கவர்ன்மெண்டுக்கு நேரிடும் நஷ்டத்துக்கு ஈடாகப்போக, பாக்கி கோடியே 7 லக்ஷத்து 62 ஆயிர ரூபாய் இந்த வருஷம் இத்தலைப்பின் கீழ் செலவு செய்யப்பட விருந்தது. இத்தொகையை உபயோகமான ரயில்வேகள் போடல், கால்வாய்கள் வெட்டல் இவைகளுக்கு உபயோகிக்காமல் நிறுத்தி சாதாரண துரைத்தனச் செலவுக்குபயோகப் படுத்திக்கொள்ளத் தீர்மானித்து விட்டார்கள். இவ்விரண்டு வகைகளுமன்றி மூன்றாவதாக அந்தந்த இராஜதானி கவர்ன்மெண்டார் செட்டாகச் செலவுசெய்து துரைத்தன சீர்திருத்த ஏற்பாடுகள் செய்வதற்காகவும் ஜனங்களுக்கு உபயோகமான வேலைகள் செய்வதற்காகவும் மிகுத்து வைத்திருந்த தொகை களையெல்லாம் அவர்களிடமிருந்து அடித்துப் பறித்து எடுத்துக்கொள்ளத் தீர்மானித்தார்கள். இதனால் ஒரு 40 லக்ஷத்து 50 ஆயிரம் ரூபாய் வந்தது. இப்படி இம்மூன்று விதங்களாலும் வந்த மொத்தத்தொகை 2 கோடியே 62 லக்ஷத்து 12 ஆயிரம் ரூபாய். இது போக பாக்கி 30 லக்ஷத்து 19 ஆயிரம் 4 ரூபாய் இன்னும் குறைவாகவே யிருக்கிறது. இத்தொகையைப்பற்றிப் பின்னால் பார்த்துக்கொள்வோமென்று விட்டுவிட்டார்கள். இப்படியாக இந்த வருஷம் புது வரிவிதித்தும், ஜன க்ஷேமத்துக்கும் தேச வளப்ப விர்த்திக்கும் அவசியமான வேலைகள் சீர்திருத்தங்கள் இவைகளை நிறுத்தியும் வரவுக்குச்செலவு சரிக்கட்ட முடியாமல் 30 லக்ஷத்துச்சொச்ச ரூபாய் குறைவாகும்படியே கணக்கை விட்டிருக்கிறார்கள். இந்த வருஷமுண்டான அதிகச்செலவுகளில் ஐரோப்பிய உத்தியோகஸ்தர்கள் நாணய வட்டத்தால் வரும் நஷ்டத்துக்கு ஈடுகட்டிக் கொடுப்பதாகச் சொல்லி அவர்களுக்கு அதிகச்சம்பளம் கொடுக்க ஏற்பாடு செய்ததில் சுமார் கோடியே 40 லக்ஷ ரூபாய் அதிகச் செலவு நேர்ந்திருக்கிறது. இது ஐரோப்பியர்பக்கமிருந்து பார்ப்பவர்களுக்கு மிகவும் நியாயமாகத் தோன்றினாலும், இந்தியாவில் வரிகொடுக்கும் ஏழை ஜனங்கள் பக்கமாகவிருந்து பார்க்கிறவர்கள் இது மெத்த அநியாயமென்று முறையிடுகிறார்கள். கவர்ன்மெண்டார் ஐரோப்பிய உத்தியோகஸ்தர்கள் படும் கஷ்டங்களைப்பார்த்துச் சகிக்க முடியாமலே அவர்களுக்கு இந்த அற்ப சாதகம் செய்யத் துணிந்தோமென்கிறார்கள். குடிகள் பக்ஷமாயிருந்து பேசுகிறவர்கள் ஏழைக்குடிகள் உடலோடுயிர் தங்கியிருக்கப் படும் கஷ்டங்களைப் பார்த்தால் ஐரோப்பிய உத்தியோகஸ்தர்கள் படும் கஷ்டமும் ஒருகஷ்டமா என்கிறார்கள். இந்த விஷயம் இப்படி யாக இன்னும் தர்க்கத்திலிருந்து வருகிறது.

---

**யூனிவர்ஸிடி கல்விச்சங்கம்.** சென்னை யூனிவர்ஸிடி கல்விச்சங்கத்தார் அவர்கள் செய்யும் வருஷாந்தரப்பரீக்ஷைகளில் தேறியவர்களுக்கு வித்தியாப் பட்டங்கள் அளிப்பதற்காகக் கூடும் வருஷாந்தரக் கூட்டம் இம்முறை மார்ச்சு ௴ 28 ௳ சாயங்காலம் கூடிற்று. அப்பொழுது வித்தியார்த்திகளுக்கு வழக்கம்போல் வித்தியாபட்டங்களளிக்கும் சடங்கு முடிந்த பின் டாக்டர் மில்லர் அவர்கள் நூதனமாக வித்தியாபட்டம் பெற்றவர்களுக்குப் புத்தி மதி கூறிச் செய்யும் உபந்நியாசம் செய்தார். அவர் 1871-ம் வருஷத்தில் ஒரு முறை இதே மாதிரி உபந்நியாசம் செய்யத் தெரிந்தெடுக்கப்பட்டார். அப்பொழுது 38-ப் பேர்கள் வித்தியாபட்டம் பெற்றார்கள். இந்த வருஷம் வித்தியாபட்டம் பெற்றவர்களின் மொத்தத்தொகை 443. சென்ற 23-வருஷ காலத்தில் வித்தையபிவிர்த்தியாயிருக்கும் அம்சங்களைக் குறித்தும் இனி அபிவிர்த்தியாகவேண்டிய அம்சங்களைக் குறித்தும் அவர் விவரித்துக் கூறி, இந்தியர்களுக்கு உறுதி, மனோதிடம், எடுத்தது முடிக்குந்திறமை, விடாமுயற்சி முதலிய சிலாக்கிய குணங்களில்லாமையை யெடுத்துக் காட்டி அவைகள் நீங்குவதற்குப் பரிகாரமாக அவருக்குத் தோன்றியவைகள் சிலவற்றை யெடுத்துரைத்துப் பேசினார்.

---

**புதிய ஸெனேட் மெம்பர்கள்.** இந்த வருஷம் 9 பேர்கள் கவர்ன்மெண்டாரால் யூனிவர்ஸிடி ஸெனேட்சபை மெம்பர்களாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள்:—மிஸ்டர் ஜஸ்டிஸ் பெஸ்ட், (2) மிஸ்டர் ஜோன்ஸ் (ப்ரெஸிடென்ஸி காலேஜ்), (3) மிஸ்டர் எம். டி. குவின் (பச்சையப்பன் காலேஜ் தலைவர்), (4) மிஸ்டர் ஏ. ஏ. ஹால் (டீச்சர்ஸ் காலேஜ் தலைவர்), (5) ஸர்ஜியன் மேஜர் ஜான் மெய்ட்லாண்ட், எம். டி. (6) ரெவரெண்ட் மார்கோஷி (நாஸரெத்), (7) ம-ா-ா-ஸ்ரீ கே. இராமானுஜாசாரியார், எம். ஏ., பி. எல். (விஜயநகரம் மஹாராஜா காலேஜ் தலைவர்), (8) ஸர் சவலை இராமசாமி முதலியார், (9) மிஸ்டர் என். சுப்பிரமணியம் (பாரிஸ்டர் அட்லா.)